ஸ்ரீமான் இராவ்சாஹேப் R. கிருஷ்ணராவ் போன்ஸ்லே அவர்கள், M.R.A.S., (Assistant Secretary to the Commissioner for Govt. Examinations, Joint Secretary, South Indian Research Conference and Member of the Senate and Academic Council, University of Madras, Madras.)



ஊசிமுறி சங்கப்பாட்டு.

பூளைப்பம் சொப்பப்ப் உஉஉஉ உஉஉதிச்
சூளைச்சாம் பல் பூசும் சொல்வலீர் கூ உழ்ழ்ழ்ப்
பப்பன்று நா அம்ம் பயல் மனமேற்றுலன்றி
ஒப்பாது நம்மறைச்சொல் உண் ம்ம்.

71-ம் பக்கம் பார்க்க.

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 10 } இரக்தாக்ஷி௵ ஆவணி௴ ௧௬௳ { பகுதி 2
1924௵ ஆகஸ்டு௴ 16௳

## கடவுள் வணக்கம்.

கருமருவு குகையனைய காயத்தி னடுவுட்
களிம்புதோய் செம்பனைய யான்
காண்டக விருக்கநீ ஞானவனன் மூட்டியே
கனிவுபெற வுள்ளுருக்கிப்
பருவம தறிந்துநின் னருளான குளிகைகொடு
பரிசித்து வேதி செய்து
பத்துமாற் றுத்தங்க மாக்கியே பணிகொண்ட
பக்ஷத்தை யென்சொல் லுகேன்
அருமைபெறு புகழ்பெற்ற வேதாந்த சித்தாந்த
மாதியா மந்த மீதும்
அத்துவித நிலையரா யென்னையாண் டென்னடிமை
யானவர்க ளறிவி னூடும்
திருமருவு கல்லா லடிக்கீழும் வளர்கின்ற
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்த குருவே. (1)

கல்லா லெறிந்தும் கைவில்லா லடித்துங் கனிமதுரச்
சொல்லாற் றுதித்தும் நற்பச்சிலை தூவியும் தொண்டரின
மெல்லாம் பிழைத்தன ரன்பற்றநா னினியேது செய்வேன்
கொல்லா விரதியர் நேர்கின்ற முக்கட் குருமணியே. (2)

முன்னிலை சுட்டொழி நெஞ்சே நின்போத முளைக்கிலையோ
பின்னிலைச் சன்மம் பிறக்குங் கண்டாயிந்த பேய்த்தனமேன்
தன்னிலை யேநில்லு தானே தனிச்சச்சி தானந்தமா
நன்னிலை வாய்க்கு மெண்சித்தி புங்காணு நமதல்லவே. (3)

## அரும்பொருள் விளக்கம்.

1. கரு=கருப்பை.

குகை=மலையிலுள்ள குகை—இந்த விடத்தில் தட்டார் பொன் வெள்ளி முதலிய உலோகங்களை வைத்து உருக்கும் மூசை என்கிற பாத்திரம்.

களிம்புதோய்செம்பு=களிம்போடு பொருந்திய தாமிரம்.

பருவம்=பக்குவம்.

அருளான குளிகைகொடு பரிசித்து=அருளாகிய குளிகையினால் தீண்டி

வேதி செய்து=(களிம்பைப்) பிரித்து.

செம்பானது களிம்போடு சேர்ந்து இருக்கின்றது. ஈண்டு பின்வரும் திருட்டாந்த தாட்டாந்தங்களை புணரவேண்டும்.

| திருட்டாந்தம். | — | தாட்டாந்தம். |
|---|---|---|
| செம்பு | — | ஆன்மா |
| செம்பிலுள்ள களிம்பு | — | ஆன்மாவின் ஆணவாதிமலங்கள் |
| மூசை | — | தேகம் |
| தீ | — | ஞானாக்கினி |
| உருகும் பக்குவம் | — | இருவினை யொப்பு மலபரிபாகம் வந்து, ஞானோபதேசம் பெற பக்குவமடையும் காலம். |
| (செம்பைப் பொன்னாக்கும் இரசவாதிகள், செம்பின் களிம்பு நீங்க உருக்கு மூசையில் சேர்க்கும்) இரசகுளிகை | | ஈசுவரன் அல்லது ஞானாசிரியரின் அருள் நோக்கம். |
| இரசவாதம் செய்வோன் | -- | ஈசுவரன் அல்லது ஞானாசிரியர் |
| களிம்பு நீங்கிய செம்பு பொன்னாகிவிடுகிறது. | | மலங்கள் நீங்கிய ஆன்மா(சீவன்) பரமான்ம சொரூப மடைகிறது. |

இரசவாதம் செய்வோன் மூசையிலுள்ள செம்பைத் தீயில் வைத்து உருக்கி, அது நன்றாய் உருகிய பக்குவத்தில் இரசகுளிகையைச் சேர்த்து செம்பிலுள்ள களிம்பைப் பிரித்து செம்பைப் பொன்னாக்குவது போல், ஞானாசிரியன் தேகத்தில் ஆணவமலத்தோடு கூடியிருக்கும் சீவனுக்கு ஞான உதயமளித்து அதனால் மனங்கரையச் செய்து தற்போதம் ஒழியும் பக்குவம் வந்தபோது அருள் நோக்கால் பிரம்மான்ம ஐக்கிய நிலையைத் தாமு செய்த முத்திப்பேற்றை யளிக்கிறார்.

யாவர்க்கும் பக்குவம் வாய்ந்தகாலை ஈசுவரனே ஞானாசிரியராக எழுந்தருளி வருகிறார் என்ற கொள்கைப்படி தக்ஷிணாமூர்த்தியையே பரமாசிரியராகத் துதித்தார்.

2. கல்லாலெறிந்து=கல்லையே (மலராகவெண்ணி ஈசுவர மூர்த்தத்தின்மேல்) எறிந்து.

சாக்கியர் என்ற சிவனடியார் ஈசுவரனிடம் மெய்யன்பு பூண்டு, தாம் பள்ளிக்குச் செல்லும்போதும், திரும்பிவரும்போதும் வழியிலிருக்கும் சிவ லிங்கத்தின்மேல் கீழே கிடந்த செங்கற் றுண்டுகளை யெறிவது வழக்கம். இவர் பெரிய புராணத்துள்ள அறுபத்துமூன்று நாயன்மாரில் ஒருவர்.

கைவில்லாலடித்தவன், அர்ச்சுனன். இவன் பாசுபதம் பெறத் தவம் புரிந்த சமயம், அவனைக் கொல்வதற்காக துரியோதனனால் ஏவப்பட்ட அசுரன் பன்றி யுருவம் எடுத்துச் சென்றபோது, அர்ச்சுனனைக் காப்பாற் றப் பரமசிவம் வேடுவ உருவந்தாங்கிவந்து அர்ச்சுனனோடு யுத்தம் புரிந்த திருவிளையாடலில், அர்ச்சுனன் தான் சாதாரண வேடுவனெனக் கருதிய பரமசிவனைத் தன் வில்லால் அடித்தான்.

கனிமதுரச் சொல்லால் துதித்தவர்கள் திருவாசகம், தேவாரம் முத லியவற்றால் எம்பெருமானைப் பாடித் துதித்த அப்பர், சுந்தரர், சம்பந்தர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வர்களாகும். வேறு சிலரும் உண்டு.

பச்சிலை தூவுதலாகிய அர்ச்சனையாதிகள் செய்து பூசித்தோர் வியாக் கிரமபாதர் முதலிய பக்தர்களாவர். தொண்டர்களின் செய்கையைக் கரு தாது அவர்களது பக்தியொன்றையே கருதும் பரமசிவம் இவர்கள் அனை வர்களுக்கும் அருள்புரிந்தனர்.

கொல்லாவிரதியர்=ஜீவ இம்சை செய்யாதோர்.

இதனால் ஈசுவரன் அருளைப் பெற ஜீவகாருண்யத்தோடு அவனிடத் தில் மனங் கனிந்த பக்தி வைத்தலே சிறந்த மார்க்கமாம் என்பது நன்கு விளங்குகிறது.

3. முன்னிலைச்சுட்டு=ஈசுவரனைத் தனக்கு அன்னியமான ஒன்றாய்ப் பாவித்தல்.

நின்போதம்='நான்' என்ற தன்மை.

தனிச்சச்சிதானந்தமாம் நன்னிலை=ஒப்பற்ற சச்சிதானந்தமயமாகிய உன் னதநிலை.

எண்சித்தி=அணிமாமுதலிய அட்டமாசித்திகள்.

நமதல்லவே=(அந்தச் சித்திகள் ஈசுவரனுடையவையேயன்றி)நம்முடைய வையல்ல.

துவைதபாவமுள்ளவரை ஐக்கியம் கூடாது. தற்போதம் ஒழியுமட் டும் ஆனந்தம் ஜனியாது. முன்னிலை யுள்ளமட்டும் ஜன்மம் ஒழியாது. தற்போதமொழிந்து தானற்று அதுவானாலன்றி பிறவியொழியாது. அதா வது ஞாதுரு ஞானஞேயம் என்ற திரிபுடி யொழியவேண்டும். அதனாற் றான் "முன்னிலைச்சுட்டு ஒழி—நின்போதம் முளைக்கின் ஐயோ பின்னிலைச் சன்மம் பிறக்கும்" என்றார்.

ஓதுமிஞ் ஞேய ஞானஞா துருவு
மொழிந்திடிற் பிறப்பும்விட் டொழியும்
பேதுறு மிந்தத் திரிபுடி தனைநீ
பிடித்திடிற் பிறப்புனைப் பிடிக்கும்
ஆதலா லோதுந் திரிபுடி தனைநீ
யகன்றுயர் சொரூபஞா னத்தைக்
கோதர வடையச் சூட்சியுங் குறுக்கிக்
கூறுதுங் கேளெனக் கூறும்.

ஆன்ம சாட்சாத்கார நிலையடைந்தாலே ஐக்கியம் கூடுமாதலின் "தன்னிலையே நில்லு தானே......நன்னிலை வாய்க்கும்" என்றனர்.

ஈசுவரன் அருளால் சித்திகள் தோன்றும். அவை ஈசுவரன் செயலேயென்று நாம் செயலற்ற நிலையிலிருக்கவேண்டுமென்றி அவை நமது செயலெனக் கருதின் அகங்காரம் தோன்றி ஞான நிலைக்கு இடையூறுண்டாக்கும். ஆதலின் அச்சித்திகள் "நமதல்லவே" என்றனர். அட்டமாசித்திகள் அகங்காரத்தை யுண்டாக்கத்தக்கவையாதலின் பரமசிவம் "தேவிகாலோத்தரம்" என்ற நூலில் "அட்டமாசித்திகளும் அனைத்துள்ளபேறுகளும் கட்டமாங்கதிகள்தரும் பரகதி காணக்கொடா" என்றனர்.

தாயுமானவரே ஆனந்தக்களிப்பில் "என்னையும் தன்னையும் வேறா உள்ளத், தெண்ணாதவண்ணமிரண்டற நிற்கச், சொன்னதுமோ ஒரு சொல்லே..." என்று கூறியருளியது ஈண்டுச் சிந்திக்கத்தக்கது.

---

# ஆனந்தபோதினி

இரக்தாட்சி௵ ஆவணிமீ ௨உ

## பிறமதம் புகுதலும் மத தூஷணையும்.

ஆண்டவன் நம்மைப் பிறப்பித்த மதத்தை, நமது முன்னோர் அனுசரித்து வந்த மதத்தை இடையில் விட்டுவிட்டு புறச்சமயம் புகுவது நமது நாட்டில் அதிகமாய் இப்போது நடைபெறுகிறது. மனிதன் தன் அறிவால் அடையத்தக்க ஒப்புயர்வற்ற பலன், மானிடஜன்மமெடுத்ததா லடையவேண்டிய பலன், என்றுமழியாத தெய்வீக பலன், ஆன்மஞானமேயாகும். புண்ணிய பூமியும், அனாதிகாலந் தொடங்கி ஆன்மஞானத்திற்கும் அரிய தெய்வ

பக்திக்கும், அதனாலடையத்தக்க அபூர்வ சக்திகளுக்கும் பிறப்பிடமானதுமாகிய நம் நாட்டில் ஜனித்த மக்கள் பிறமதம் புக வேண்டியதன் காரணத்தைச் சற்றாராய்வாம். இதற்கு முக்கியமாய் மூன்று காரணங்கள் உண்டெனலாம்.

1-வது காரணம்.—தான் பிறந்ததும், தன் முன்னோர்கள் அநுசரித்ததுமாகிய மதத்தில் மோக்ஷமார்க்கம் சரியாக அல்லது பூரணமாகக் கூறப்படவில்லை யென்றுணர்ந்து, அதன்மேல் புறச்சமயங்களை ஆராய்ச்சிசெய்து, எந்த மதத்தில் மோக்ஷமார்க்கம் சரியாகக் கூறப்பட்டிருக்கிறதென்று தெரிகிறதோ அம்மதத்தில் போய்ச் சேர்வது.

2-வது காரணம்.—சுயமத ஆராய்ச்சியின்மையால், புறச்சமயத்தவரின் போதனையில் மயங்கியும், மேலானபதவி, பொருள், கௌரவம் முதலியவற்றைப் பெறலாம் என்று புறச்சமயத்தவர் கூறும் மொழிகளை நம்பியும் தம் மதத்தைக் கைவிட்டுப் புறச்சமயத்தில் புகுதல்.

3-வது காரணம்.—அதிகாரமும் பலமும் உடைய அன்னிய மதத்தினரின் பலவந்தத்தால், பிரியமில்லாதிருந்தாலும், அந்த அன்னியர் மதத்தில் சேர்ந்துகொள்ளல்.

இவற்றில் மூன்றாவது காரணத்தால் புறச்சமயம் புகுவோர் மேல் குற்றம் கூறுவது நியாயமல்ல. ஏனெனில் அந்த அன்னிய மதத்தவர்கள் செய்யக்கூடிய வேதனைக்கும், அவர்களால் நேரக்கூடிய பிராணபத்துக்கும் அஞ்சியே அவர்கள் புறச்சமயம் புகுகின்றனர். ஆயினும் சரியான மதப்பற்றும் ஈசுரபக்தியும் உடையவர்கள் என்ன ஆபத்து நேர்வதாயினும் தம் மதத்தைக் கைவிடார்கள். அத்தகைய பக்திமான்களை அன்னிய மதத்தவருடைய அநீதச் செயல்கள் ஒன்றும் செய்ய முடியாது. அதற்கு அப்பர் சுவாமிகளைப்போல் அனேகம் திருட்டாந்தங்களுண்டு. ஆயினும் நீதிபொருந்திய ஆங்கில துரைத்தனம் நடக்கும் இக்காலத்தில் அத்தகைய காரணம் நடைபெறுவதில்லை யாதலின் அதைப்பற்றி நாம் சிந்திக்கவேண்டுவதின்றாம்.

இனி 1-வது, 2-வது காரணங்களைப்பற்றி ஆராய்வாம்.

1-வது காரணத்தால் புறச்சமயம் புகுவோர் மிக்க அரிதென்றே கூறவேண்டும். ஏனெனில் "ஆண்டவன் நமக்கு இந்த அரு

மையான மானிடஜன்மத்தை யளித்தது,நாம் ஆன்மஞானம் பெற்றுத் தன்னை யடைவதாகிய முக்திப்பேற்றைப் பெறுவதற்கே, பிறப்பிறப்பாகிய துக்கசாகரத்தைக் கடந்து நித்தியானந்தமாகிய முக்தியாங் கரை சேர்வதற்கே'' என்ற அறிவு உதித்து, முக்தியென்பதென்ன, அதை யடையும் மார்க்கம் எது, என்று ஊக்கத்தோ டாராய்ச்சி செய்து அதற்காகப் பாடுபட முயல்வோர் மிக மிகச் சொற்பமே.

அவ்வாறு பாடுபட முயல்வோர் முதலில் தம் மதத்தில் அவற்றைப்பற்றி சரியாய்க் கூறப்பட்டிருக்கிறதாவென்று பூரணமாக ஆராய்ச்சி செய்து, அதில் சரியாய்க் கூறப்படவில்லையென்று மனதார உணர்ந்தபின்பே புறச்சமயங்களை யாராயப் புகுவார்கள். நமது மதத்தைச் சேர்ந்த ஒருவன் தன் மதத்தை யாராய்ச்சி செய்து, தனக்குச் சந்தேகங்கள் நேரின் தக்க ஆன்றோரைக் கேட்டுத் தெரிந்துகொள்வானாயின், அதை விட்டுப் புறச்சமயம் புக வேண்டிய அவசியமே யில்லையென்றும் அப்படிச் செய்தால் நமது ஆன்மார்த்த விஷயத்தை நாமே கெடுத்துக்கொள்வதாக முடியுமென்றும் எளிதிலுணர்வான் என்பது சத்தியம்.

ஏனெனில் நமது மதத்தில் சிருஷ்டிக்கிரமும், கடவுள் இலக்ஷணமும், ஆன்ம லக்ஷணமும், முக்திலக்ஷணமும், முத்தியடைதற்குரிய மார்க்கங்களும் பூரணமாய், இன்னும் அதிகமாய் ஒரு வார்த்தைகூடக் கூறுவதற்கு இடமில்லாத விதமாகக் கூறப்பட்டிருக்கின்றன. அதாவது வேறு எம்மதமும் இதனினும் அதிகமாகக் கூற வழியில்லை. இதை மறுத்துக் கூற ஒருவராலும் இயலாது.

மார்க்கங்கள் என்று பன்மையாய் ஏன் கூறினோமெனின், ஆன்மாக்களெல்லாம் ஒரே விதமானவையாதலாலும், யாவர்க்கும் கடவுள் ஒருவரே யாதலாலும், நித்தியமாகிய முத்திநிலை யாவர்க்கும் ஒரே மாதிரியானதே. ஆயினும் அவரவர்களின் கன்ம பலத்தின் தாரதம்மியப்படி அறிவுவிளக்கத்தில் தாரதம்மியமிருப்பதால், அந்தந்த அதிகாரிக்குத் தக்கபடி மார்க்கங்களில் பேதம் இருக்கவேண்டியது அவசியமே. அதன்படியே அவரவர் அறிவு விளக்கத்திற்குத் தக்கபடி கடவுளைப் பாவிப்பர்.

“ அவரவர் தமதம தறிவறி வகை வகை
அவரவ ரிறையவ ரெனவடி யடைவர்கள்
அவரவ ரிறையவர் குறைவில ரிறையவர்
அவரவர் விதிவழி யடையநின் றனரே.''

(திருவாய்மொழி உயர்வு.)

நமது வேதத்தில் மதங்கள் அத்வைதம், துவைதம், விசிட்டாத்வைதம் என்று மூன்று வகுப்பாய்ப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. இவற்றில் ஒன்றிலேனும் சேராதமதம் உலகில் கிடையவே கிடையாது. இருக்கவும் முடியாது. உலகிலுள்ள சகல மதங்கட்கும், இனி யுற்பத்தியாகக்கூடிய எல்லாவித மதங்கட்கும் நமது மதத்தில் அஸ்திவாரம் இருக்கிறது என்பது இதனுனும் நன்கு விளங்கும்.

ஆதலின் நமது மதத்தினின்றும் புறச்சமயம் புகுந்தோரில், முதற்காரணத்திற்காகச் சென்றோர் ஒருவருமில்லை யெனத் திடமாய்க் கூறலாம். ஆயினும் இரண்டொரு அறிவாளிகள் சுயமத ஆராய்ச்சியின்றி பிறமதத்தவரின் போதனையால் மயங்கி அம் மதத்தில் போய்ச் சேர்ந்தவர்கள் பிறகு உண்மையறிந்து தம் மதத்திற்கே திரும்பி வந்துவிட் டிருக்கின்றனர்.

முதற்காரணப்படி "உலகிலுள்ள மதங்களில் எதில் சரியான மோக்ஷமார்க்கமிருக்கிறது, எந்த மதத்தில் தெய்வத்தன்மையை இவ்வுடலிலிருக்கும்போதே பிரத்தியட்சமாய்க் காணும் மார்க்கம் கூறப்பட்டிருக்கிறது" என்று சகல மதங்களையும் ஆராய்ச்சி செய்து அத்தகையமதம் நமது மதமேயென்று உணர்ந்து இதைக் கைக்கொண்ட மேல்நாட்டார் சிலரில் பிளவாட்ஸ்கி அம்மையார் (Madame Blawatsky) ஒருவர்.

2-வது காரணம்.—இப்போது முக்கியமாய் நமது மதத்திலிருந்து புறச்சமயத்தில் புகுவோரனைவரும் இக்காரணத்தாலேயே அவ்வாறு செய்கிறார்கள். இவர்களில் பெரும்பாலார் தாழ்ந்த வகுப்பாராக நம்மால் கருதப்படுவோரே. அவர்கள் அவ்வாறு செல்லத் தூண்டுதல் செய்வது மூன்று விஷயங்கள். அவை,

(1) சுயமத ஆராய்ச்சி சற்றுமின்மை.

(2) நாம் அவர்களைத் தீண்டாதவர்களென்று ஒதுக்கி வைத்து, நமது கோயில்களுக்குள் அவர்கள் வரலாகாதென்று தடுத்து, அவர்களை யிழிவாய் நடத்துவது.

(3) "அவர்கள் நாம் செய்த பூர்வ கன்மப் பயனால் இச்சாதியில் பிறந்தாலும் ஆசார ஈனராயிருப்பதாலும் நமது கெட்ட கர்மாவை யனுபவித்தொழிக்கவேண்டியதே" என்று திருப்தியோடு பொறுமையாகவே யிருந்தாலும், புறச்சமயத்தவர் அவர்களைத் தூண்டித் தம் மதத்திற்கு இழுத்தல், என்ற மூன்று விஷயங்களே.

இவர்களைத் தங்கள் மதத்திற்கு இழுக்கும் அன்னியமதப் பரிசாரகர்கள், (முக்கியமாய்க் கிருஸ்தவர்களே) நமது மதத்திலுள்ள சரியை கிரியை (விக்கிரகாராதனை), புராணக்கதைகள் முதலியவற்றைப்பற்றி நயவஞ்சகத்தோடு குற்றங் கூறும்போது மதக்கல்வியில்லாத இவர்கள் அவற்றிலுள்ள தத்துவார்த்தங்களையும், நன்மைகளையும் உணராதவர்களாய் தம் மதத்தின் நம்பிக்கையில் உறுதி குன்றியவர்களாகிறார்கள். அச்சமயத்தில் "உங்கள் மதத்தவர்கள் உங்களைத் தீண்டாதவர்களென்று இழிவாக நடத்துகிறார்கள். கோயிலில் உங்களைச் சேர்ப்பதில்லை. எங்கள் மதத்தில் சேர்ந்தால் உங்களுக்குச் சம மரியாதையுண்டு. கோயிலில் எல்லாரும் சமமே" என்பது முதலிய வார்த்தைகளால் நமது மதத்திலுள்ள மேல்ஜாதியார்மேல் அவர்களுக்கு வெறுப்புண்டாகச்செய்து, அதோடு உங்களுக்குக் கல்வி கற்பித்து, நல்ல உத்தியோகம், கௌரவம், செல்வம் யாவும் உண்டாகச் செய்வோம் என்று ஆசை காட்டினால் கல்வியில்லாப் பாமரர் கும்பு கும்பாய்ப்போய் அன்னியமதத்தில் சேர்ந்துவிடுகிறார்கள்.

இயற்கையிலேயே புறச்சமயிகளாகிய கிருஸ்தவர்களுக்கு நமது மதத்தில் துவேஷபுத்தி யுண்டென்பது அனுபவம். அதோடு நமது மதத்தில் கூறியுள்ள அனேகம் விஷயங்களின் உட்கருத்து அவர்களுக்குத் தெரியாதாகையால் எளிதில் குற்றம் கூறுகிறார்கள். நமது முன்னோர்கள் பயனற்ற அனாவசியமான கொள்கை யொன்றையேனும் நிலைநிறுத்தவில்லை. அவர்கள் விஷயங்கள் யாவும் பிரத்யக்ஷ அனுபவத்தையே அஸ்திவாரமாகவுடையவை. திருட்டாந்தமாய் நாம் சூரிய நமஸ்காரம் செய்வதைச் சில புறச்சமயிகள் மூடக்கொள்கை யென்கிறார்கள். உண்மையில் பிரகாசத்திற்கு ஆதியாகிய வஸ்துவைத் தியானிக்கும் ஒருவர்க்கு நேத்திரப்பிரகாசமுண்டாவது அனுபவம். மானசதத்துவ சாத்திர முணர்ந்த அறிவாளிகள் இதை யெளிதிலுணர்வார்கள். உண்மை அப்படி யிருந்தாலும் "கடவுளால் படைக்கப்பட்ட உயிரற்ற வஸ்துவாகிய சூரியன் முதலியவற்றைத் தெய்வமாக வணங்குவதால் கடவுள் கோபமடைவார்" என்று கூறினால் சாதாரணக் கல்விகூட இல்லாத பாமரர் மயங்கவும் கேட்கவேண்டுமோ?

மேற்கண்ட காரணங்களால் யாராகவிருந்தாலும் தமது முன்னோர் மதத்தைவிட்டு அன்னியமதம் புகுதல் அறியாமையும்

மூடத்தனமுமேயாகும். நமது மதக்கட்டளை இதுவே. ஆன்றோ ரும் "எச்சமயத்தும் இயற்கையை விட்டிடலாகாது" என்றே அருளியிருக்கின்றனர். மேலும் அவ்வாறு மதம் மாறுவோன் "எல்லா மதங்களாலும் பாதிக்கப்படுபவர் ஒரு கடவுளே; எல்லா மதங்களும் அவரை யடைவதற்காக உள்ள பாதையில் மேல்நோக் கிச் செல்ல வழிகாட்டிகளாகவே யிருக்கின்றன" என்ற உண் மையை யறியாதவனாகிறான். அவன் அகண்டமாய் எங்கும் நீக்க மற நிறைந்த ஏக சொரூபியை ஒரு சிறு எல்லைக்குள் அடைக்கும் மந்தமதியோனே யாகும். கிருஸ்தவப் பாதிரிமார் கல்வியில்லாத ஏழை ஹிந்துக்களைக் கும்பு கும்பாய்த் தந்திரமாய்த் தங்கள் மதத் திற்கு இழுப்பதையே தங்கள் வேலையாகக் கொண்டிருக்கிறார்கள். அதற்குத் தக்க உதவியாக ஏராளமான பணமும் அதிகாரிகளிடம் பூரணச் செல்வாக்கும் அவர்களுக்கு இருக்கின்றன. உலக முழு மையுமே தங்கள் மதமாக்கி விடவேண்டுமென்பது அவர்கள் பேராசை.

உலகம் முழுமையும் எக்காலத்திலும் ஒரே மதத்தை யனு சரிக்காதென்பதும், பணத்தாலும் செல்வாக்காலும் அடையப் படும் ஒரு மதத்தின் விருத்தி நிலையாக நீடித்திராதென்பதுமாகிய உண்மைகளை யவர்கள் உணர்ந்திலர்போலும். இவர்கள் நடக்கை ஏசுகிருஸ்துவின் கொள்கைக்கு நேர் மாறானது. அவருக்கு ஒரு மதத்திலிருப்பவர்களை இன்னொரு மதத்திற்கு இழுக்கவேண்டு மென்ற நோக்கமில்லை யென்றும், அன்னிய மதத்தவர்களின் கொள்கைகளை யவர் ஏற்றுக்கொண்டு அவர்களோடு சகோதரபாவ மாய்ப் புழங்கிவந்திருக்கிறாரென்பதும், சில சமயங்களில் ஒரு மத த்திலிருப்பவர்களைத் தம்மதத்திற் கிழுக்க முயல்வோரைக் கண்டி த்து கடிந்து கூறியிருக்கிறார் என்பதும், அவர் சரித்திரத்தைக் கவ னமாய் ஆராய்ச்சி செய்வோர்க்கு நன்கு விளங்கும். இது சம்பந்த மாக அவருடைய நடக்கையைப்பற்றி 1924ஸு 5உ, 9உகளில் வெளியான "இந்துசாதனம்" (யாழ்ப்பாணம்) என்ற பத்திரிகை யில், "மதமாறுதல் ஒவ்வாதது—ஏசுநாதரின் அபிப்பிராயம்" என்ற தலையங்கத்தின் கீழ் வரையப்பட்டுள்ள விஷயத்தைப் பார்த்தால் சற்று விவரமாக அறியலாகும்.

நமது மதக்கொள்கையும் மதம் மாறலாகாதென்பதே. சத் தியோன் முத்திமார்க்கத்தை எச்சாதியானும் எம்மதஸ்தனும்

அனுஷ்டிக்கலாம் என்பதே நமது மதத்தின் பாரபட்சமற்ற கொள்கை. கருமகாண்ட சம்பந்தமான கிரியையாதிகள் செய்வதுமட்டும் இன்னவர்கள்தான் செய்யலாம் என்ற விதியுண்டு. அதுவும் ஆசாரத்தைப் பொருந்தியதாகும். அதற்குத் தக்க காரணங்களுமுண்டு. ஆனால் ஞானமார்க்கத்திற்கோ ஒரு பேதமாவது நிபந்தனையாவது கிடையாது. ஞான நெறியில் பிரவேசிப்போன் முன்னே ஜாதிப்பற்று, மதப்பற்று, சமயாசாரம் முதலியவற்றை விட்டொழிக்கவேண்டும் என்பது விதி.

எம்மதத் தோரெவ் வகைநிட்டை சொல்லினுஞ்
சம்மத மேயெமக் குந்தீ பற
தற்போத மாய்க்குமே லுந்தீ பற. (திருவுந்தியார்)

சமயா சாரசங் கற்ப விகற்பமு
மமையா தாங்குல வாசார மானது
மமையா தாரும் விடாதவில் வாழ்க்கையு
மமையார் தோளாய் விடுதலா சாரமே. (தேவிகாலோத்திரம்)

இவ்வாறு நமது மதத்தில் பாரபட்சமின்றி எச்சமையத்தவர்க்கும் எச்சாதியினர்க்கும் ஆண்டவன் அருள் கிடைக்கும் என்ற உண்மை நன்கு விளக்கப்பட்டிருக்கிறது. சகல அண்டங்களையும் அவற்றிலுள்ள எல்லாச் சீவராசிகளையும் சிருட்டித்தவர் ஒரே கடவுளாக விருக்க அவர் அப்படிச் செய்யாது போவரேல் கருணாநிதியென்றும், கருணையே யுருவாகவுடையவரென்றும் கூறப்படுவதற்குச் சற்றும் அருகராகார்.

இப்போது நம் நாட்டில் புறச்சமயம் புகுவோராகிய பாமரர் அனைவரும் மத ஆராய்ச்சி செய்து அன்னிய மதத்தில்தான் உண்மை யிருக்கிறதென்று தெரிந்து செல்பவர்களல்ல. நாம் அவர்களுக்கு மதக்கல்வியும், ஆசாரமும் புகட்டி நாகரீகமுண்டாகச்செய்து, அவர்களை இழிவாய் நடத்துவதை விட்டு, சகோதரர்களாகப் பாவித்து அவர்களுக்கு இயற்கையாக உள்ள உரிமைகளை யளித்து அவர்களைச் சரியாக நடத்தினால் அவர்கள் ஒருபோதும் புறச்சமயம் புகார்கள் என்பது திண்ணம்.

இவ்வாறு நம்மவர்கள் புறச்சமயம் புகுவதைத் தடுத்து மதத்தைப் பாதுகாக்கக் கடமைப்பட்டவர்கள் இன்னும் இதைக் கவனிக்காமலிருப்பது பெருந் துக்கமான விஷயமே. மதத்தலைவர்களாகிய மடாதிபதிகள், பரம்பரை ஆசாரிய பீடத்தைச் சேர்ந்த

வர்கள், மதப்பற்றுடைய பக்திமான்கள், முதலியவர்கள் இவ் விஷயத்தில் சிரத்தையெடுத்துக்கொள்ளவேண்டும். நாம் மதப் பிரசாரம் செய்து நமது மதத்தைப் பரவச்செய்யாவிடினும், நமது மதத்திலுள்ளவர்கள் அன்னிய மதத்தில் போய்ச் சேர்வதைத் தடுத்து நமது மதத்தைப் பாதுகாக்கவேனும் முயலக் கடமைப் பட்டவர்களன்றோ. இச்சமயத்தில் அது அவசியம் செய்யவேண்டிய புண்ணியத் தொண்டென்பதை யவர்கள் இனியேனும் உணர்ந்து தக்க ஏற்பாடு செய்வார்களென்று பிரார்த்திக்கிறோம். மதம் குன்றுதிருந்தால்தான் மடாதிபதிகள், மதத்தலைவர்கள், ஆசாரியார்கள் என்ற பதவிகள் நிலைத்திருக்கும் என்பது தெரிந்த விஷயம்.

## மத தூஷணை.

எங்கள் மதமே மெய்யானது, எங்கள் மதத்தில் கூறப்பட்ட கடவுளே மெய்க்கடவுள். உங்கள் மதமும் அதில் கூறப்பட்ட கடவுளும் பொய் என்று ஒரு அன்னியமதத்தை இகழ்ந்து கூறுவதே மததூஷணையாகும். ஒருவர் தம் மதத்திலுள்ள விஷயங்களைப்பற்றியும், அவை உண்மையென்பதைப்பற்றியும், தம் மதக் கொள்கைகளின் உயர்ந்த கருத்துகளைப்பற்றியும் எடுத்துக் கூறுவது மத தூஷணையாகாது. அல்லது தம் மதத்தவர்களை நோக்கி "நமது மதத்தில் ஆன்மார்த்த விஷயத்திற்கு வேண்டிய யாவும் பூரணமாகக் கூறப்பட்டிருக்கின்றன. அன்னிய மதஸ்தர் நம் மதத்தில் குற்றங்கூறுவது அறியாமையாலேயே. அவர் தந்திரமான மொழிகளுக்கு நீங்கள் செவிகொடுத்து மயங்கி, நம் முன்னோரின் மதத்தைக் கைவிடவேண்டாம்" என்று கூறுவதும் மத தூஷணையாகாது.

சிலர் தம்மதத்தைப்பற்றி கூறுவதாகப் பிரஸ்தாபித்து அன்னியமதத்தின் கொள்கைகளையும் ஆசாரங்களையும் நிந்திக்கும் வழக்கமுடையவர்களாக விருக்கிறார்கள். தங்கள் மதத்தைக் கூறுவதாக ஒரு நூலுக்கும் பெயர் வைத்து, நூலில் அன்னியமதக் கொள்கைகளைத் தூஷிக்கும் விஷயங்களையே அதிகமாக வரைகிறார்கள். இவ்வாறு செய்வது மததூஷணையே.

நாம் இதை யச்சில் ஏற்றும் சமயம் யாழ்ப்பாணத்திலுள்ள நமது சந்தாநேயர் ஒருவரால் அனுப்பப்பட்ட "மெய்யான சமயம் எது? பொய்யான சமயம் எது?" என்று நாமம் சூட்டப்

பட்ட ஒரு சிறு புத்தகம் நமக்கு வந்து சேர்ந்தது. சமயோசித மாக வந்த இது "மத தூஷணை"க்கு ஒரு முதல்தர அத்தாக்ஷியா யிருப்பதால் இதைப்பற்றி இச்சஞ்சிகையின் மற்றோர் பாகத்தில் வரைந்துள்ளோம். ஆங்கு அதைக் கவனிக்கக் கோருகிறோம்.

எல்லா மதங்களும் பிரதிபாதிப்பது ஒரு கடவுளையே. மற்ற படி கொள்கைகளும் ஆசாரங்களும் இடம் காலம் இவற்றிற்குத் தக்கபடி வித்தியாசப்பட்டிருக்கும். ஒரு மதஸ்தனுடைய ஆசா ரம் இன்னொரு மதஸ்தனுக்கு அனுசாரமாய்த் தோன்றும். முக் கியக் கருத்து எல்லா மதங்களிலும் ஒன்றாகத்தான் இருக்கும். "மனிதன் கடவுளின் அருளைப் பெறவேண்டும். அதற்காகக் கட வுளிடத்தில் அன்பும் வணக்கமும், அதாவது பக்தியுடையவனாக இருக்கவேண்டும். கடவுளுக்கு நம்மாலாகவேண்டியது ஒன்றுமே யில்லை. அவர் விருப்பு வெறுப்பற்றவர். யாவற்றையும் சிருட் டித்து இரட்சிப்பவர். எல்லாச் சீவன்களிடத்திலும் கருணையுடைய வர். ஆகையால் நாம் எல்லாச் சீவன்களிடத்திலும் கருணையோடு நடந்துகொண்டால்தான் கடவுள் நம்மேல் திருப்தியடைவார். இன்னொரு சீவனுக்கு வருத்தமுண்டாக்கத்தக்க எந்த காரியத்தை யும் நாம் செய்யலாகாது. மாதா பிதா குரு இவர்களிடம் கடவு ளுக்கு இரண்டாவதாகப் பக்தி வைக்கவேண்டும். பொறாமை, பேராசை, விபசாரம், பொய், களவு, கொலை முதலிய கெட்ட குணங்களையும் நடக்கைகளையும் அறவே விட்டொழிக்க வேண் டும்" என்பன முதலிய விஷயங்களைப்பற்றி எல்லா ஆஸ்திக மதங் களும் ஒரே மாதிரிதான் கூறுகின்றன. ஆகையால் ஒருவன் எந்த மதக் கடவுளைத் தூஷித்தாலும் தன் மதக் கடவுளைத் தூஷித்த குற்றத்திற்கே உள்ளாகித் தக்க தண்டனை யடைவான் என்பது சத்தியம். அதனாற்றான் நமது மெய்ஞ்ஞானச் செல்வியாம் ஔவை பிராட்டியார் "தெய்வமிகழேல்" என்று மிகச் சுருக்கமாய்க் கூறி யருளினர்.

சகோதர சகோதரிகளே! இவ்வாற்றால் பிறமதம் புகுவதா லும் மததூஷணையாலும் ஒருபோதும் நன்மையுண்டாகாதென் றும், அதற்கு மாறாகத் துன்பமும் பாபமுமே சித்திக்குமென்றும் நாம் நன்குணர்ந்தொழுகுமாறு கருணாநிதியாகிய பரம்பொருள் அருள்புரிவாராக. ஓம்தத்ஸத்.

# அம்மையின் பெருமை.

1. சிவபெருமானும், அம்மையும் வேறல்ல. சிவபெருமானே அம்மையாயும், அம்மையே சிவபெருமானுயும், உலகத்தைக் காத்து ரட்சிக்கின்றனர். "சக்தியும் சிவமுமாகித் தாணுவாய், செகத்திற்கெல்லாம் முத்தியை யளிக்கும்நாத முதல்வனைப் போற்றி" என்று பெரியோரு முரைத்துளார். அல்லாமலும், எம்பெருமான் தம் திவ்விய சொரூபத்தை யடியார்க்குக் காட்டியருளும்பொழுது, எவ்விதத் தோற்றத்துடன் பிரகாசிக்கின்றார்? பாதி யம்மை பாதி சிவம். ஆகையால் அம் முழுமுதற் கடவுளே தாயாகியும் தந்தையாகியும், அன்பன் வேண்டிய தோற்றத்தில் காட்சி கொடுத்து அருள்புரிகின்றார்.

2. பெற்றோர்களில், தந்தையைப் பார்க்கிலும் தாயை நேசிப்பதும், அன்புடனுதரிப்பதும், உலகவழக்கம். தாயும், பிதாவைப்பார்க்கிலும் பிள்ளை எவ்விதமான குற்றத்தைச் செய்தபோதிலும், தன்னையே கடிந்த போழ்திலும், மன்னித்து ஏற்றுக்கொள்ளுகிறாள், நேசிக்கிறாள். சில சமயங்களில் மக்களைக் காப்பாற்றுவதற்காக, இவ்வாழ்க்கையை யர்ப்பணஞ் செய்து இறக்கின்றாள். இத்தாயிவ்விதம் நேசித்தால் செகன்மாதாவின் அன்பை யாராலளவிடக்கூடும்? நாம், அவ்வம்மையை அன்னியோன்னிய அன்புடனும், பக்திவிசுவாசத்துடனும், நேசித்து, பூசித்து, அவளின் திருவருளைப் பெற்றால், இப்பிறவிக்கடலைத் தவிர்த்துப் பேரின்பசாகரமாகிய முக்தியடைவது நிச்சயம்! இதனாலன்றோ, உலகப் பிரசித்திபெற்ற சுவாமி இராமகிருஷ்ண பரமஹம்சரும், காளிகாதேவியை இஷ்ட தெய்வமாகப் பாவித்து அவ்வம்மையினருளால் பிரம்மானந்த நிஷ்டையை யடைந்தனர். அம் மகாத்மா, தம் செகன்மாதாவின்மே லிருக்கும் அன்பார்ந்த வைராக்கியத்தால், எல்லா மாதர்களிலும் அவ்வம்மையின் சொரூபம் படிந்திருப்பதைக் கண்டு, அவர்களை யுலகமாதாவாகப் பாவித்துக் காமவிச்சைகளைத் தவிர்த்தனர்.

3. எவ்விதமான ரகசியமாயிருந்தாலும், எவ்விதமான குற்றம் செய்திருந்தாலும், எவ்விதமான தீச்செயல்களில் மூழ்கியிருந்தாலும், மக்கள், தங்களன்னையிடம் சொல்லி, அப்பிழைகளுக்காக, மனஸ்தாபப்பட்டு, மன்னிப்புப் பெறக் கூச்சப்படமாட்டார்கள். ஏன்? தங்கள் தாய்மார், அளவிடப்படாத அன்புடையவர்களென்றும், எப்பாதகத்தைச் செய்திருந்த போதிலும் தங்களறியாத்தன்மைக்காக இரங்கி, அன்புமேலீட்டினால் தயைகூர்ந்து, அறிவூட்டி, மேலும் இப்பேர்ப்பட்ட குற்றங்களைச் செய்யா வண்ணம் பாதுகாத்து வைப்பார்களென்னும் நம்பிக்கையாலன்றோ! நம்மனைவரையும் ஈன்றெடுத்த மாதாவினளவிடப்படாத வன்பை யார் தான் கூறவல்லார்? உலகங்களுக்கெல்லாம் தாயாகிய அம்மையை யார் தான் மறக்கவல்லார்? எங்கும் வியாபித்து, எல்லாம் தானேயாய், உலகத்தைத் தாங்கும், மகத்துவம் தங்கிய தாயை மறந்துமுய்ய வழியுண்டோ?

4. இவ்வித வன்புள்ள மாதா, எந்நேரமும் நம்மைக் காப்பாற்றும் ஆசையுடன், ஆணுவுக்குளணுவாய்த் தோன்றிப் பிரகாசித்துக்கொண்டிருக்கிறாள். ஆனால், நாம் உலகச் சேஷ்டையினால் ஏவப்பட்டு, உலகவின்பமே நித்தியமானதும், உன்னதமானதுமென்ற மமகாரங்கொண்டு அவ்வமமையின் வடிவத்தைக் காண்கின்றோமில்லை. நம்மைச் சூழ்ந்துகொண்டு வேதனைப்படுத்துமிவ்வழுக்கைப் போக்குமளவும், நாம் அவ்வுன்னதக் காட்சியினின்றும் மறைக்கப்பட்டுள்ளோம். ஆனால் தம் மக்களாகிய உயிர்களின் ஈடேற்றத்தை நிறைவேற்றுவதற்காகிய வழிகளிலே கண்ணுங்கருத்துமா யிருக்கின்றாள் நமது மாதாவாகிய பராசக்தி.

5. அப்பேர்ப்பட்ட வன்புபொருந்திய தாயின் பாதங்களை மக்களாகிய நாம் என்றும் பணிந்து, அன்புடன் ஸ்தோத்தரித்து, அவளின் கருணை மேலீட்டினால் அன்னியோன்னிய பக்தி யதிகரித்து அச்சச்சிதானந்தமே மெய்ப்பொருளெனக் கண்டு உய்வோமாக.

வ. முத்துசாமி.

---

## "ஆனந்தனைப்பற்றிய அனுபவமும் ஓர் யோசனையும்"

இதைக் கண்ணுறும் அறிவாளர்களே! அரிய சகோதரிகளே!! ஓர் விஞ்ஞாபனம்.

1. நம் தாய்நாடாகிய இப்பரதகண்டத்தில் நவீன நாகரீகம் என்ற ஓர் தடாகம் உண்டாக்கப்பட்டு அத்தடாகத்தில், பரதகண்டத்தவர்களாகிய நாம், மூழ்கி வர வரக் காகமானது வெண்ணிறமாக மாறும் பொருட்டு தண்ணீரிலேயே யிருந்து இறந்த கதையைப்போல நம்முடைய நடை, உடை, பாவனைகள் கெட்டதோடுகூட, நமக்கு ஆத்மாவைப் போன்ற மதப்பற்றும் அற்றுப்போய்விடும்படியான ஆபத்திலிருக்கும் சமயத்தில், நமது ஆனந்தன் என்னும் அரிய பெரிய ஆசிரியன் ஒருவன், ஓர் புறாவானது ஜலத்தில் தத்தளிக்கும் ஓர் எறும்பைக் கரை யேற்றிவிட்டது போல் கடந்த ஒன்பது ஆண்டுகளாக வந்து நமது மதவிஷயத்தைப்பற்றி நமக்கு வற்புறுத்திக் கூறிவருகிறான்.

2. பரதகண்டவாசிகளாகிய நம்மவர்களிற் சிலர் இதை இன்னும் அறியாமலும் நம் ஆனந்தனைக் கவனியாமலு மிருப்பது தெரிந்தோ அல்லது தெரியாமலோ அல்லது நவீன நாகரீக தடாகத்திலிருந்து எழுந்திருக்க மனமில்லாததாலோ அறியேன். நிற்க,

3. நம் இந்துமதமாகிய, இந்தியத் தாயினிடத்தில் பிறந்து அதன் உண்மையை ஆராய்ந்தறியாமல், புறச்சமயமாயையில் சிக்கி மயங்கும் சிலர்களினிடையே இன்னும் நம் ஆனந்தன் செல்லவில்லைபோலும். இனியாவது நிகழும் பத்தாம் ஆண்டில் இவர்களிடமும் செல்லும்படி ஈஸ்வரன் கருணைபுரிவாரென்று பூரண நம்பிக்கையோடு பிரார்த்திக்கின்றேன்.

4. தன் கண்களிரண்டும் தெரியாத குருடனொருவனிடம் ஒருவன் போய், தன் கையிலிருக்கும் ஓர் மண் கட்டியை வைரத்தினைக் கட்டியென்று சொல்லி ஏமாற்றுவதுபோல சுயமத ஆராய்ச்சி யில்லாதவர்களை அன்னிய மதத்தவர் தந்திரமாய் மயக்கி, தங்கள் மதத்தில் வந்து சேர்ந்து பிறகு திண்டாடும்படி செய்துவிடுகிறார்கள். நாட்டுப்புறங்களில் சில பாதிரிமார்கள் போய் கிராமாந்திரங்களில் பாடசாலைகள் ஏற்படுத்தியும், கிராமவாசிகள் வீடுகள்தோறும் கிறிஸ்தவப் பெண்கள் (பைபல் உமன்) சிலர் போய் நயவஞ்சகமாய்ப் பேசியும் அவர்களை மிகுந்த ஆபத்துக் குட்படுத்துகிறார்களென்பதை நேரில் பார்த்துமிருக்கிறோம். மற்றும் ஆனந்தன் பன்முறையும் எடுத்துக் கூறியுமிருக்கின்றான் ஆகையால்,

5. சகோதர சகோதரிகளே ?

" வம்பு செறி தீங்கினர் தம் கண்ணில்
தெரியாத தூரத்து நீங்குவதே நல்லோர்நெறி "

என்று கூறியபடி, நம்மதத்துவேஷிகளாகிய, கிறிஸ்துமதப் போதகர்களுடைய படுமோசமான வார்த்தைகளுக்கு நமது செவியைச் சாய்ப்பதைவிட இவர்களைக் கண்ணுறாமலே இருப்பது உத்தமர்களின் கொள்கையல்லவா ? மற்றும் அவர்கள் புத்தகங்களும் அவ்வாறே வெறுக்கத்தக்கவை. ஆனால் எல்லாருமே அப்புத்தகங்களைப் பார்க்கக் கூடாதா ? என்றால், நம் மத ஆராய்ச்சி செய்தவர்கள் நன்றாகப் பார்க்கலாம். அதைப்பற்றி ஒரு கெடுதலும் உண்டாகமாட்டாது. அப்படி நம்மத ஆராய்ச்சியுள்ளவர்களிடம் அவர்கள் வரமாட்டார்கள்.

இதைக்கண்ணுறும் சகோதர உபாத்திமை நண்பர்களே ?

ஓர் வேண்டுகோள். அதாவது உங்கள் பாடசாலைகளில் கட்டாய பாடமாக வைக்கவேண்டுமென்று எனக்குத் தோன்றுவன சில உள.

அவையாவன :—

(1) நம் பள்ளியில், பிரதி தினமும், நம் மத சம்பந்தமான தேவாரம், திருவாசகம் முதலியவைகளிலிருந்து, பக்திமார்க்கம் நிறைந்த பாடல்களை, பாடம் ஆரம்பிக்குமுன், மாணவர்களால் பாடச்செய்தல். அதில் மாணவர்களுக்குப பற்றுதல் உண்டாகும் வண்ணம் சரித்திர பூர்வமாய் அவற்றை விளக்கிக் காட்டல்.

(2) கதைசொல்லல் என்ற பாடத்தில், கோழி பேசின, நரி சொல்லின. கொக்கு கூறின என்று சில பொய்யான கட்டுக்கதைகளை மாணவர்களிடம் சொல்லாமல், நம் புராணங்களிலிருந்து கதைகளைத் தெரிந்து வகுப்புகளுக் கேற்றபடி அமைத்துப் போதித்தால் சிறந்த நீதிகள் விளங்குவதோடு பின் அவர்களின் வாழ்நாளைக்கும் சாதகமாகுமென்பது சொல்லாமலே விளங்கும்.

(3) பள்ளிப்பிள்ளைக ளனைவரும் தங்கள், தங்கள் மதங்களுக் கேற்றபடியாக விபூதி, அல்லது திருமண் இவைகளை அணிந்து வரும்படியாக

வும் அவைகளில் பிள்ளைகளுக்கு பற்றுதல் உண்டாகும்படியாயும் அவற்றின் கருத்துகளை விளக்கிக் காட்டி நன்றாய்ப் போதிக்கவேண்டும்.

(4) பாடசாலையில் நம் மத சம்பந்தமான கதைகளுள்ள பாட புஸ்தகங்களையே உபயோகித்துவருமாறு நம்மாலான முயற்சி செய்யவேண்டும்.

(5) வெண்பா.

"ஆனந்தனைக் காண்பதுவும் அறிவே என்றும்
ஆனந்தன் பகர்வதும் நல்லறிவே—ஆனந்தன்
அறிவுறுத்தத் தறிவதுவும் அறமே யாமதனை
வருவித்தல் என்றுமே நன்று"

என்றபடி நமது ஆனந்தன் என்னும் புத்தகாசிரியன் தோன்றி நம் உயிருக்கு நன்மை பயப்பதாகிய ஆன்மார்த்த போதனைகளையும், மதாசார ஒழுக்கங்கள், நீதிகள் முதலிய பல அரிய விஷயங்களையும் தெளிவாய் நமக்குப் போதித்து வருகிறான் என்பது யாவரும் நன்கறிந்தவிஷயம் ஆனதால் நமது பாடசாலை பெரிய வகுப்பு மாணவர்கள் ஒவ்வொருவரையும் தனித்தனிச் சந்தாதாரனாகச் சேரும்படி செய்து மாதந்தோறும் ஆனந்தன் போதிக்கும் நற்புத்திகளை வாசிக்கச்செய்து, அவற்றின் சாராம்சங்களைக் கற்பிக்கவேண்டுவதுந் தவிர, நம் கிராமாந்திரங்களிலுள்ள கற்றறிவாளர் சிலர்களிடம் நம் ஆனந்தனின் பெருமையையும் அவசியத்தையும் எடுத்துக் கூறி, அவர்களையும் வருவிக்கச்செய்து பார்ப்பார்களானால் நமது கிராமங்களில் புறச்சமய போதகர்களால் நம் பாடசாலைக்கு ஏற்படும் கஷ்டமும் அவர்கள் வலைகளில் சிக்கித் தவிக்கும் நமது கிராமவாசிகளின் துயரமும் முற்றும் அகலும். மற்றும் உலகக்ஷேமத்திற்காகப் பாடுபடும்படியான இவ்வுபாத்திமைத் தொழிலுக்கு நல்லுயர்வும், நல்ல கீர்த்தியும் பெரும் புண்ணியமும் இடைப்பதோடு சர்வ வல்லமையுள்ள ஈஸ்வரனுடைய கிருபா கடாக்ஷமும் உண்டாகுமென்பதில் ஐயமில்லை.

ஆகையால் நண்பர்களே மேலே கூறிய விடயங்களைப் பார்வை யளவில் விட்டுவிடாமல் செய்கையளவில் அனுபவத்திற்குக் கொண்டுவருவீர்களென்று உறுதியாய் நம்பியே உங்களை வேண்டிக்கொள்ளுகிறேன். ஈஸ்வரன் கருணைபுரிவாராக.

S. பூர்ணம் பிள்ளை, உபாத்தியாயர், துறையூர்.

---

## ஆரிய சித்தாந்தம்.

### (மானசயோகம்.)

(24-ம் பக்கத் தொடர்ச்சி.)

மனிதருக்கு அகக்கருவிகளில் மனமே பிரதானமாம். அதற்கு விருப்பம், பற்றுதல் என்று இருவகைக் குணங்களுண்டு. விருப்பமென்பது தான் சந்தித்த விஷயப்பொருளில் ஆசைப்படுதல். பற்றுதல் என்பது ஆசைகொண்ட பொருள்களை மறவாமலிருப்பதும் அதை விடாமல் நிற்

பதுமாம். விஷயப் பொருள்களை மனதுக்குப் புலப்படுத்த ஐந்து மார்க்கங்களுண்டு. அவை மெய், வாய், கண், மூக்கு, செவி யென்பனவாம். இவைகளே ஐம்புலன்கள் எனப்படும். இவற்றுள் ஒவ்வொன்றும் தன் வசப்படும்படி மனதை இழுக்கும் சக்தியுடையது. அவற்றுள்ளும் கண்ணும் வாயும் மிக முக்கியமானவை. ஏனெனில் கண்ணினால் கண்ட பொருளை மனம் ஒருபோதும் மறப்பதில்லை. கண்ணை மூடி நோக்கும் போது அப்பொருள் பிரத்தியக்ஷத்தில் காணப்படுவதுபோல எதிரில் தோன்றும். அதனால் அப்பொருளினிடத்தி லுண்டான ஆசை ஒழிவதில்லை. அப்பொருள்களில் முக்யமானவை மனைவி மக்கள்களாம். இப்பொருள்களைக் காணும்போது மனம் சஞ்சலப்படாமலொழியாது. அப்படியே வாயினால் உண்ட பொருள்களைச் சிந்திக்கும்போதும, உண்ணத்தக்க பொருள்களைக் கண்களாற் காணும்போதும் வாயில் நீர் ஊறுதலாகிய விகாரப்பாடு தோன்றும். அப்பொழுது அந்தப் பொருளை உண்ணுதற்கு விருப்பமுண்டாகும். அதனால் ஆசை மிகும். இந்த ஆசையினால் பல கர்மங்கள் செய்ய நேரிடும். சில சமையம் காதினால் கேட்ட தொனி வடிவான பொருளும் பிரத்தியட்சத்தில் தோன்றுவதுபோலக் காணப்படும். கண் வாய்களைப்போலக் காதும் ஒரு கொடிய இந்திரியமே. மனைவி மக்கள் கூறிய இனிமையான வசனங்களை நினைக்கும்போது மனம் பூரிப்பதை யாவரும் அறியலாம். இதைப்போல மணமும் பரிசமும் உணரப்படுவன வல்லவென்பதையும் அனுபவத்திற் கண்டறியலாம். ஆயினும் மூக்கும் துவக்கும்கூட மனதுக்குச் சலனமளிப்பனவேயாம். மனதை இவ்விந்திரியங்களினிடத்தில் செல்லவொட்டாமல் தடுப்பதே மானசயோகமாம். இது மஹாத்மாக்களிடத்திற் காணப்படு மரிய செயலாம்.

"ஆயின்மிக்க வறிவோர் செயலெலாம்
நேயமிக்க மனதை நிறுத்தல்காண்"

என்ற ஆன்றோர் கட்டுரையே சான்றும். மனதைப் புலன்களின் வழியிற் செல்லாமல் தடுப்பதே இந்திரிய நிக்கிரகமெனப்படுவதாம். ஜனனமரண சம்சார துக்கங்களை உள்ளவா றுணர்ந்து வருந்திச் சென்ற ஜன்மங்களில் தவம்புரிந்து பிறந்திருக்கும் புண்ணியாத்மாக்களுக்கே யிந்த இந்திரிய நிக்கிரக சக்தியுண்டாம். மற்றவர்களுக்குக் கிடைப்பதரிது. இதற்கு ஹடயோகக்காரர்கள் பிராணவாயு சதா சலிப்பதனால் மனதும் சலிக்குமென்றும், அப்போது புலனுக்கு நேர்பட்டு அவ்வப் பொருளைப் பற்றுமென்றும், அதற்குப் பிராணவாயுவை அசையாமல் நிறுத்துவதே மனதை யடக்கும் வழியாமென்றுங் கூறுவர். "வாயு நிற்க மனமு முடனிற்கும், தோயநின்றிடில் நிற்குந் துரும்புமே" என்பது ஆன்றோர் கூறிய பிரமாண வசனமாம். அதாவது பிராண வாயுவுடன் கூட மனஞ் சஞ்சரித்தலால் அவ்வாயுவைச் சலியாமல் நிறுத்தினால், நீரிலோடுந் துரும்பு நீர் நின்ற விடத்தில் நிற்பதுபோலப் பிராணவாயு நின்றவுடன்

மனம் ஒரு நிலையில் நின்றுவிடுமென்பது. பிராணவாயுவை ஓடாமல் நிறுத்தி மனதை யடக்குவது மிகவும் கடினமாமென்பது சிவராஜ யோகிகளின் அபிப்பிராயம். (அதுவுமன்றி பிராணவாயு மறுபடி சலிக்கத் தொடங்கியதே மனமும் சலிக்கத் தொடங்கும்.) அது முன்னமே கூறப்பட்டது.

ஆசையை யடக்கினால் மனந் தானே யடங்குமென்பது அத்வைத சித்தாந்த பரமாசாரியராகிய ஸ்ரீமத் சங்கர முனீந்திரர் முதலியோர் அபிப்பிராயம். இவ்வாசையை யடக்குவதற்காகவே வேடிக்கை பார்த்தல், நாடகம் காணல், சங்கீதம் கேட்டல், விகடம் கேட்டல், கதாபிரசங்கங்களில் மனதைச் செலுத்தல், விநோத வேடிக்கைகளைப் பார்க்க விரும்புதல், வேசை தாசிகளை யுற்று நோக்குதல், சுகந்த பரிமளங்களை யணிதல் முதலியவைகள் கூடாவென விலக்கப்பட்டன. சுவையுள்ள பதார்த்தங்களைப் புசிக்க விரும்புதலும் விலக்கப்பட்டது. கண்ணுக்கினிய வஸ்துக்களைக் காண விரும்பாதொழிவதே நேத்திரேந்திரியத்தை ஜயித்தலாம். வாய்க்கு இனிய வஸ்துக்களைப் புசிக்க விரும்பாதொழிவதே ஜிஹ்வேந்திரிய ஜயமாம். மனதுக்கு இன்பந்தரும் மாதர் மக்கள் சம்பாஷணை, கதாப்பிரசங்கமாதிகளைக் கேட்கவிரும்பாதொழிவதே சுரேந்திரேந்திரிய ஜயமாம். இந்த மூன்று இந்திரியங்களையும் அவை தாந் தாம் செலுத்தும் விஷயங்களை விரும்பாதொழித்து மனதைக் களங்கமறச் செய்துகொண்டால் ஏனைய இந்திரியங்களும் எளிதில் ஜயிக்கப்பட்டனவாம்.

ஆசையே ஜனனமரண சம்சாரதுக்கத்திற்குக் காரணமாம். கோபம் பொறாமையாதி துர்க்குணங்களுக்கும் காரணமாகும். ஆசையே கொலை களவாதி பஞ்சமஹாபாதகங்களுக்கும் காரணமாம். இந்த ஆசையே மனதுக்கு ஒழியாத அழுக்காம். ஆசை மோட்ச நாசத்துக்கு ஏதுவுமாம். இந்தக் களங்கமொழிந்தால் மனம் பரிசுத்தமாய்ப் பிரகாசிக்கும். அம்மனதில் பரமாத்மாவின் பிரதிபிம்பம் தோன்றும். அப்போது மனம் அதனிடத்தில் பற்றுதல் வைத்து அதனிடத்தில் தங்கும். அதனால் பிரபஞ்சம் மறையும். பரமாத்மா ஒன்றே மனதுக்கு விஷயமாகும். மனம் அதனையே நோக்கி நிற்கும்போது பிரபஞ்சமெல்லாம் பரமாத்மாவாகவே காணப்படும். இவ்வாறு எங்கும் பரமாத்மாவாகவே கண்டு தற்செயலற்று நிற்பதே மானசயோகமாம். அப்போது பிராணவாயுவும் சலியாது. அதனால் ஆயுசும் நீடித்திருக்கும். பிராணவாயு இயங்காதடங்கவே சரீரமும் மரம் போல நிலைத்து நிற்கும். பிராணவாயுவுமடங்கி, மனமுமொடுங்கிச் சரீரமும் செயலற்று நிற்கவே ஜீவாத்மா பரமாத்மாக்கள் என்கிற பேதமற்று இரண்டு மேகமாகும். இதுவே முத்திநிலைமையாம். மானசிகயோகத்துக்கு ஆசையை ஒழிப்பதே யோகமுயற்சியாகும். இம்முயற்சியில் வாசியோகத்தைப் போன்ற கஷ்டமில்லாமையால் இதனையே பல வான்றோர் கைக்கொண்டனர்.

பூர்வகாலத்தில் பிரஹலாதர் பக்திமார்க்கத்தில் நின்று பரம்பொருளை யாராதித்தார். அவ்வாறு ஆராதித்தும் மனமடங்கி நில்லாமையால் இதற்கு யாது செய்யலாமென்று ஆலோசித்தார். பிறகு அன்னபானாதிகளிலும், ஆடையாபரண பரிமள சந்தனாதி யலங்கிருதங்களிலும் ஆசையை ஒழித்தார். இராஜ்யபரிபாலனத் தொழிலையும் விட்டார். தனிமையான ஓரிடத்திலிருந்துகொண்டு, எப்பொருள்களிலும் ஆசையற்றவராய்ப் பரமாத்மாவைச் சிந்தித்துக்கொண்டிருந்தார். சிறிதுகாலத்துக்குள் மனமும் பிராணவாயுவு மொடுங்கிச் சலனமற்று ஒரே நிலையில் நின்றுவிட்டார். பரமாத்மா ஒன்றையே தரிசனம் செய்துகொண்டிருந்தார். இந்த நிலைமையில் ஐயாயிர வருஷங்கள் கடந்துபோயின. அரசனில்லாமையால் இராஜ்யம் சீர்குலையலாயிற்று. இவரது யோகாக்கினி எங்கும் பரந்தமையால் சர்வ பிராணிகளும் வருந்தின. தேவர் தானவர்களும் மனிதர்களும் வருந்தினார்கள். பிரகலாதருடைய இதய கமலத்திலிருக்கும் பரமாத்மாவாகிய ஸ்ரீமந் நாராயண மூர்த்தி இதை யறிந்து உலக துன்பத்தை நீக்கக் கருதி, அவருடைய இதயத்தினின்றும் வெளிப்பட்டுப் பூமியில் வந்து நின்றார். இதனாற் பிரகலாதர் யோகம் கலைந்து வெளியில் நிற்கும் பரம்பொருளை நோக்கி மனங்களித்து அவரை வணங்கிப் பலவாறு துதித்து மகிழ்ந்தார். ஸ்ரீமந் நாராயணமூர்த்தி பிரகலாதரை நோக்கி நீ யெல்லாப் பொருள்களையும் பரமாத்மாவாகக் காணும் பெருந்தன்மை பெற்றிருத்தலால், புளியம்பழத்தைப்போலப் பிரபஞ்சத்தில் பற்றுதலில்லாமல் இராஜ்யபரிபாலனஞ் செய்து யோகநெறி தவறாதிரு என்று அனுக்கிரகம் செய்துவிட்டு மறைந்தருளினார். அன்றுமுதல் பிரகலாதர் இராஜ்யபரிபாலனஞ் செய்துகொண்டு தாமரையிலைத் தண்ணீர்போலப் பிரபஞ்சத்தில் தாக்கற்று நின்றார் என்று நூல்கள் கூறுகின்றன. இவர் செய்தது மானசிக யோகமேயாம். ஹடயோகமல்ல. பிராணவாயுவை இடைகலை பிங்கலை வழியாகச் செல்லாமல் தடுத்துச் சுழிமுனை வழியே செலுத்தி மூலாதாரக் கனலை மூட்டி, மூலவாயிலைத் திறந்து அதன் வழியே பிரமரந்திரத்தேற்றித் துவாதசாந்தம் சேர்வதும், ஆறாதாரங்களையும் பேதிப்பதும், முக்கிரந்திகளையும் பேதிப்பதும் நெருப்பாறு*மயிர்ப்பாலங்களைக்கடப்பதுமாகிய பெரிய கஷ்டம் இந்த யோகத்தில் இல்லை. இது மனதை ஒன்றிலும் ஆசைப்படவிடாமல் தடுப்பதேயாம். இது எளிதிற் செய்யக்கூடியதாயினும் இதற்குப் பூர்வஜன்மத்திற் செய்த பெரும் புண்ணியம் வேண்டும். ஹடயோகம் மிக்க கஷ்டமானதாகையால் இந்த எளிய யோகத்தை யாவரும் கைக்கொண்டுய்வதே கடமையாம். (தொடரும்.)

சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

---

* நெருப்பாறு மயிர்ப்பாலம்=சகல கேவலங்கள்.

## மகாத்மா காந்தியவர்கள் கூறிய அரிய விஷயம்.

(குறிப்பின் 32-ம் பக்கத் தொடர்ச்சி.)

5-ம் பத்தி—மகாத்மா, தாம் தேகேந்திரியங்களை யடக்கியாளக் கூடுமெனினும் மனதின் எண்ணங்கள் தம் பிரியப்படி நடைபெறுவதில்லையென்கிறார். மகாத்மாவிற்குப் பிறர் நலத்தின் பொருட்டாகவேனும் சில கருமங்களைச் செய்யவேண்டுமென்ற நாட்டம் இருக்கின்றது. அது அடியோடு ஒழிந்தாலன்றி மனதில் எண்ணங்கள் தோன்றாதிரா.

6-ம் பத்தி—இதில் மகாத்மா தமது அனுபவத்தில் சாக்கிரத்திற்கும் சொப்பனத்திற்குமுள்ள வித்தியாசத்தைக் கூறியருள்கின்றார். சாக்கிரத்தின் வாசனையே சொப்பனம். சாக்கிரத்தில் மனதில் எண்ணங்கள் தோன்றாதபடி தடுக்கமுடியும் என்றும் சொப்பனத்தில் முடியவில்லையென்றும் மகாத்மா கூறுகிறார்.

சாக்கிரத்தில் மனதை வேறுபிரித்து அதை யடக்கமுயல்வதுபோல் சொப்பனத்தில் முடியாது. சாக்கிரத்தில் மனம் சிந்தனையின்றி கிடப்பது சுபாவமாகிவிட்டால்தான் சொப்பனத்திலும் சிந்தனை யெழாமலிருக்கும். சொப்பனத்தில் இது சொப்பனமென்பதும், மனதை யடக்கவேண்டும் என்பதுமாகிய உணர்ச்சிகளே யுண்டாகா. இது சொப்பனம் என்ற அறிவு உதித்தால் தட்சணம் சொப்பனம் நீங்கிச் சாக்கிர நிலை வந்துவிடும். சுழுத்தியில் மனம் பூரணமாய் ஒடுங்கியிராமல், சாக்கிர வாசனையால், பழையவையும் புதியவையுமான விஷயங்களில் பிரவேசித்தலைவதே சொப்பனம். அப்போது அறிவின் இயக்கம் நின்றிருப்பதால் மனம் சாரதியில்லாக் குதிரைபோல் தான் போன போக்காய் ஓடியலைகிறது.

ஒவ்வொரு சமயத்தில் கனவில் சோல்ப சாக்கிர உணர்ச்சி யுண்டாவதுண்டு. சாதாரணக் கனவில் தன் தேகம் தவிர, தானிருக்கும் இடம், சூழ்ந்துள்ள விஷயங்கள் முதலிய மற்ற யாவும் முழுமையும் அன்னியமாகவே தோன்றுவதுண்டு. அச்சமயம் அவன் பயங்கரமாகக் கூச்சலிடுவதைக் கேட்கும் அவன் தந்தை அவன் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டால், கூப்பிடுவது தன் தந்தையென்றுமட்டும் தெரிந்தாலும், மற்றப்படி தானிருக்கும் இடம் முதலிய யாவும் கனவிலுள்ள அன்னியப் பொருள்களாகவே யிருக்கலாகும். ஏனெனில் பூரண சாக்கிரம் உண்டாகவில்லை. ஆனால் அச்சமயம் அவன் தந்தை "என்ன கனவு காண்கிறாய்?" என்று கூறினால், நாம் காண்பது கனவு என்ற உணர்ச்சியுண்டான அக்கணமே யவனுக்குப் பூரண விழிப்புண்டாகிவிடும்.

நமது மகாத்மா அவர்கள் நமது புண்ணிய பூமியாகிய பாரதநாட்டைப் பற்றியுள்ள கொடும்பிணியை யொழித்து அது பூர்வீக உன்னத நிலையை யடையச்செய்வதற்கென்றே அவதரித்த உத்தம புருடராதலின், அவர் தம் மனதை யடியோடு இலௌகிக விஷயங்களில் பிரவேசிக்காதபடி நிறுத்திவிட உதவாது. அப்படிச் செய்வதாயின் தாய்நாட்டிற்குப் பாடு

படும் வேலையை நிறுத்திவிடவேண்டும். அதை நிறுத்தினால் மனதை விஷயங்களில் செல்லவொட்டாது அடியோடு அவர் நிறுத்தக்கூடும். சாக்கிரத்தில் நிறுத்திவிட்டால் சுழுத்தியிலும் மனம் விஷயங்களில் செல்லாது. அதாவது சொப்பனமே யுண்டாகாது.

7-ம் பத்தி—மனம் நிம்மதியான நிலைமையிலிருந்தால் அது தேகசுகத்திற்கு மிக்க அனுகூலம் செய்கிறது. அதோடு ஆன்மசாக்ஷாத்காரம் பெற்று ஆனந்தத்தோடிருப்பவனுடைய தேகம் இன்னும் நேர்த்தியான சுக நிலையிலேயே யிருக்குமெனலாம். ஆனால் இதையே மாறாத விதியாகக் கருதிவிடலாகாது. ஏனெனில் பிராரப்த கன்மம் ஞானியையும் விடாது. அவனும் அதை யனுபவித்தே தீரவேண்டும். (''எஞ்சிய பிராரப்தத்தின் வினை யனுபவித்தே தீரும்'' கைவல்யம்.) ஞானியோ மனச்சலனமின்றி தேகாபிமானமின்றி சாக்ஷிமாத்திரமா யிருப்பவன். அவனுக்குள் கர்த்திருத்துவம் போக்திருத்துவம் இல்லை. (ஒன்றைச் செய்வதும் ஒன்றை யனுபவிப்பதுமாகிய உணர்ச்சி கிடையாது.) அப்படியாயின் பிராரத்வத்தின் கதி யென்ன? அது தேகத்தையே தாக்கும். தேகமே யதை யனுபவித்துத் தீரவேண்டும். அது முடிந்ததே தேகம் வீழ்ந்துவிடும். ஆன்மா பரமான்ம சொரூபத்தில் கலந்த நிலையில் நின்றுவிடும். ஆயினும் உலகோர் அவன் இன்ன வியாதியால் பாதிக்கப்படுகிறான் என்று கூறுவர். அஞ்ஞான நிலையிலுள்ளோர் தாதான்மியத்திரியங்கள் பொருந்தியவர்களாய்த் தேகாபிமானத்தோடிருப்பதால் கன்மபலன்களைத் தாங்கள் அனுபவிப்பதாகக் கருதுகிறார்கள்.

ஆகையால் பிராரப்தப் பயன்படி ஞானியின் தேகமும், நோயற்று சுகமாகவோ, சுகவீனமாகவோ, கொழுத்துப் பருத்தோ, வதங்கி எலும் புந் தோலுமாகவோ, கட்டுவிட்டுக் கல்போல் உறுதியாகவோ காணப்படும். முதுகில் பிளவைகண்டு புழு நெளிந்துகொண்டிருந்த மகானும் ஒருவர் இருந்திருக்கிறார். சிலருக்குப் பிராரப்தத்தால் சித்திகள் தாமே தோன்றி அதனால் நல்ல வசீகர தேகமுடையவர்களாக விருப்பதுமுண்டு. ஆனால் தேகம் எப்படி யிருந்தாலும் ஞானியின் சித்தம்மட்டும் கலங்காது. அவன் பூரண சாந்தம் பொருந்திய ஆனந்த நிலையிலேயே யிருப்பான்.

8-ம் பத்தி—ஞானம் ஒரே பிறவியில் கிட்டிவிடாது. முன் ஜன்மங்களில் பாடுபட்டுக் கொஞ்சம் பாக்கி யிருப்பவனுக்குத்தான் இந்த ஜன்மத்தில் ஞானம் உதயமாகும். அந்த விஷயத்தில் ஒருவன் இச்சென்மத்தில் எதுவரையில் பாடுபட்டானோ அதுவரையில் அடுத்த ஜன்மத்தில் தானே கைக்குவரும். மறு ஜன்மம் உண்டென்பது சுருதி யுக்தி யனுபவமாக நிரூபிக்கப்பட்டிருக்கும் விஷயம். நம்முன்னோரில் பலர் கடந்த பிறவிகளின் அனுபவங்களை யோக சக்தியால் உணர்ந்தே மறு ஜன்மமுண்டென்பதை ஸ்திரப்படுத்தி யிருக்கிறார்கள்.

10-ம் பத்தியின் முடிவில் மகாத்மா சரீரத்திலுள்ள பற்று போய்விட்

டால் தூல பலத்தைப் பெறவேண்டுமென்ற ஆசையும் போய்விடும் என்கிறார். இது இயற்கையாகிய உண்மையே. ஆனால் தேகப்பற்றை யொழித்தல் எளிதல்ல. மந்ததரமதியினர்க்குத் தேகம் வேறு, தாம் என்ற ஆன்மா வேறு என்பதே விளங்குவது கடினம். ஆன்மாவே நாம் என்று அனுபவமாக அறிந்தவர்களுக்கும் நீடித்த பழக்கத்தால் அப்போதைக்கப்போது தேக உணர்ச்சி தோன்றுமெனில் மற்றையோரைப்பற்றிக் கூறவும் வேண்டுமோ. தேகம் சுகமான நிலைமையிலிருந்தால்தான் மனதை யடக்க அனுகூலமாயிருக்கும். ஆகையால் ஆன்ம சாக்ஷாத்காரம் கிட்டி ஆரூடனுக்கு மட்டும் தேகம் வேண்டற்பாலதே. இவ்வாறிருப்பதால் தேகப்பற்றை யடியோடொழிப்பது மிகக் கஷ்டமே. ஞான அப்பியாசி ஆரம்பத்திலேயே தேகம் தான் என்ற அபிமானத்தைவிட்டு அதைத் தனக்கு அன்னியமாகப் பாவிக்கத் தொடங்கவேண்டும். அந்த அப்பியாசத்தால் கொஞ்சம் கொஞ்சமாய்த் தனக்கு ஒரு தேகம் இருக்கிறதென்ற உணர்ச்சி நீங்கி ஞானானுபவம் முதிர முதிர தேகப்பற்று ஒழியும்.

11-ம் 12-ம் பத்திகள்—குற்றம் செய்கிறவர்கள் பெரும்பாலும் தம் காரியத்தைக் குற்றமல்லவென்றே கருத முயல்வார்கள். மனப்போக்கை யடக்க முடியாமல் குற்றத்தைச் செய்துவிடினும், பிறகு மனச்சாட்சி அறிவிக்கையில் அது குற்றமென்றறிந்து மனஸ்தாபப்பட்டு "அந்தோ இம் மனப்பேயை யெப்படி யடக்குவது" என்று வேதனையடைவோன் காலக்கிரமத்தில் மனதை யடக்கும் வல்லமையைப் பெறுவான். அவன் தன் குற்றத்தை மறைக்கவேமாட்டான். ஒரு பொருளை யடையவேண்டுமென்று ஆவல்கொள்வதே அப்பொருளை யடைவதற்கு வேண்டிய முக்கிய சாதனமாகும். அந்த ஆவல் உண்டாகி நிலைத்தால் அப்பொருள் கைவந்ததேயாகும். ஏனெனில் ஒன்றை யடையவேண்டுமென்ற எண்ணம் உறுதிப்பட்டால் பிறகு அதை யடைவதற்கு வேண்டிய முயற்சிகளைத் தானே யெடுத்துக்கொள்வான். மோக்ஷத்தை நாம் அடையவேண்டும் என்ற திட இச்சையுண்டாவதே மோக்ஷத்தையடையச் செய்யும். ஆன்றோர் மோக்ஷமடையும் அப்பியாசத்தைப் பத்து படிகளாகப் பிரித்து, மோக்ஷமடையவேண்டுமென்ற இச்சையை முதற்படியாகக் கூறி "முதற்படி கைவந்தக்கால் முழுவதும் கைவந்ததாமே" என்று கூறியுள்ளார்கள்.

இந்திரியச் சேட்டைகளை யடக்க 12-வது பத்தியில் கூறப்பட்ட மார்க்கங்கள் ஆரம்ப அப்பியாசிக்கேயாகும். அவை தற்சமய உபசாந்தியாய் முடியுமன்றி நிலையான நிக்கிரகம் ஏற்படாது. சட்சு இந்திரியம்(கண்) ஒரு அழகிய பெண்ணைக் காணும்போது "சே! இந்த உருவத்தைக் காண்டலால் ஸ்திரீயிச்சை யுண்டாகும்" என்று கருதிக் கண்களை மூடிக்கொண்டாலும் அச்சமயம் மட்டுமே அவ்வுருமறையும். அதுவும் கண்கள் வேறிடங்களில் நாட்டம் வைப்பதனால். ஆனால் மனம் உள்ளவரையில் அது கண்ட வுருவத்தைத் தனக்குள் சிந்தித்து அதன்மேல் ஆசையைப் பெருக்கிக்கொண்டேயிருக்கும். மனம் இந்திரியங்களில் பிரவேசித்து விஷயங்

களைக் கிரகிக்கிறது. மனம் சலனமுறுதிருந்தால் கண் எந்த உருவத்தைக் கண்டாலும் காது எந்த நாதத்தைக் கேட்டாலும் விருப்பாவது வெறுப் பாவது உண்டாகாது. அதனால் கர்மமும் சேராது. பஞ்சேந்திரியங்களை ஒவ்வொன்றாக நிக்கிரகம் செய்வது ஐந்து தலைகளுள்ள ஒரு நாகத்தின் சிரங்களை யொவ்வொன்றாக வெட்ட முயல்வது போலாம். ஒரு சிரத்தைக் கொய்தால் மற்றொரு சிரசால் அது கடிக்கும். அந்த சிரசை வெட்டினால் அதற்குள் முன் வெட்டிய சிரம் பழையபடி முளைத்துக்கொள்ளும். அத் தகைய மகிமையுடையது அந்த நாகம். ஐந்து சிரங்களுக்கும் வேர்போ லுள்ள கழுத்தை வெட்டினால்தான் ஐந்து சிரங்களும் கூண்டோடொழி யும். அதுபோல் மனதை யடக்கினால் இந்திரியங்களின் சேட்டை யடியோ டழியும். மனதை யொடுக்கும் முறையில் ஒடுக்கவேண்டும். ஆசை யொழிந்தால் மனம் தானே மடியும். ஆயினும் அப்படிச் செய்வது சுலப மல்ல.

பத்திரிகாசிரியர்.

---

## நமக்கு சோப் அவசியமா ?

சோப் என்ற சவுக்காரம் செய்யும் ஒருவர் நமது பத்திரிகையில் வெளியிடுமாறு நமக்கு ஒரு வியாசம் அனுப்பினார். அந்த வியாசத்தின் சாரம் "நமது நாட்டில் போலி சோப் செய்வோர் அதிகமாக மலிந்துவிட் டனர். இவர்கள் அதற்கு வேண்டிய சாத்திர உணர்ச்சியாவது, பயிற்சி, அனுபவமாவது ஒன்றுமின்றி கண்டபடி சொல்பச் செலவில் சோப் செய்து விற்கிறார்கள். இந்தச் சோப்பை யுபயோகித்தால் தேகத்திற்குக் கெடுதியே யுண்டாகுமாதலால் ஜனங்கள் இது விஷயத்தில் எச்சரிக் கையா யிருக்கவேண்டும்" என்பதே. இதனடியில் தமது கையொப்பமிட்டு "சோப் செய்வோர்" என்று குறித்திருக்கிறார்.

இதனால் "நாம் செய்யும் சோப்தான் சரியானது. இதை யுபயோகித் தால் தேகத்திற்கு நல்ல சுகமுண்டாகுமாதலின் இதையே வாங்குங்கள்" என்று கூறுவதுபோல நன்கு விளங்குகிறது. இதை நாம் ஒரு வியாசமாகக் கருதாமல் விளம்பரமாகவே கருதுவதால் சஞ்சிகையில் வெளியிடவில்லை. ஆயினும் இந்த சோப் என்ற சௌக்காரத்தை நம் நாட்டினர் உபயோகிக்க வேண்டியது அவசியமா ? இதனால் நேரிடக்கூடிய நன்மைகள் என்ன ? என்ற விஷயங்களைப்பற்றி நமது சகோதர சகோதரிகளுக்கு அறிவிக்க வேண்டியே இதைப்பற்றி எழுதலானோம்.

இந்தச் சௌக்காரம் என்பது 'காஸ்டிக் சோடா' என்ற கார வஸ்து வோடு எண்ணெய், கொழுப்பு, வாசனைத் தைலம் முதலியவை சேர்த்துக் காய்ச்சுவதால் உண்டாவது. "காஸ்டிக் ஸோடா" என்பதே இதற்கு வேண்டிய மூல சரக்கு. இதுவே அழுக்கை யெடுப்பது. இது, நமது நாட்டு வண்ணார், துணியின் அழுக்கைப்போக்க உபயோகிக்கும் 'உழமண்' என்பதிலுள்ள வஸ்துவேயாகும். நமது வண்ணார் அதை அழுக்கோடும்

மண்ணோடுமே உபயோகிக்கிறார்கள். மேல்நாட்டாரோ மண்ணையும் அழுக்கையும் நீக்கி அதிலுள்ள சத்தாகிய ஒருவித கார உப்பைச் சுத்தமாக எடுத்துக்கொள்கிறார்கள். அதனால் இதில் காரம் அதிகம். உழமண்ணில் காரம் குறைவானதால் அது துணிகளைப் பலகீனப்படுத்துவதில்லை. இந்த சுத்தமான உப்பில் காரம் அதிகமானதால் இதை உபயோகித்தால் துணிகள் பலங்குறைந்து நைந்து சீக்கிரம் கிழிந்துபோவது அனுபவம்.

அப்படிப்பட்ட வஸ்துவை நமது தேகத்தின்மேல் பூசி சருமத்திலுள்ள அழுக்கை யெடுக்க உபயோகிக்கிறோம். ஆனால் அதைத் தனியா யுபயோகிக்காமல் கூட எண்ணெயோ ஆட்டுமாட்டுக் கொழுப்போ (பெரும்பாலும் மாட்டுக்கொழுப்பே) சேர்த்து உபயோகிக்கிறோம். இது நமக்கு அவசியமா?

நம் தேகத்தைச் சுத்திசெய்துக்கொள்ள நம் நாட்டில் தக்க வஸ்துக்களில்லையா? மேல்நாட்டார்கள் சில நூற்றாண்டுகளுக்கு முன்பே ஸ்நானம் செய்யும் வழக்கத்தைக் கைக்கொண்டார்கள். இங்கிலாந்தில் இன்ன வருடம் இன்ன மாதம்தான் ஸ்னான அறைகள் ஏற்படத் தொடங்கின என்று ஒரு காலம் குறிக்கப்பட்டிருக்கிறது. நம் நாட்டில் அநாதிகாலம் தொடங்கி இந்த வழக்கம் ஏற்பட்டிருக்கிறது. இதற்கு விதிகளும் உண்டு. நம் முன்னோர் நம் நாட்டின் உஷ்ண நிலைமையை யனுசரித்து ஸ்னானம் செய்வதில் இன்னின்னவை யுபயோகிக்கவேண்டுமென்று வைத்திய சாத்திரங்களிலேயே விதிகள் ஏற்படுத்தி யிருக்கிறார்கள். நம் நாட்டிற்கு எண்ணெய் ஸ்னானம் அவசியம். நல்லெண்ணெய் ஸ்னானத்தால் எவ்வளவோ நன்மைகளிருக்கின்றன. பிளேக் என்ற கொடிய தொத்துவியாதியைத் தடுக்கும் குணம்கூட அதனிடமிருக்கிறது. முன்பு பம்பாயில் பிளேக் வந்தபோது அங்கு வசித்திருந்த தென்னாட்டார் இந்த எண்ணெய்ப் பூச்சாலேயே தப்பித்துக்கொண்டார்கள். நம் முன்னோர் மூளை, கண்கள், சிரசிலுள்ள நரம்புகள், இவற்றிலுண்டாகும் பல ரோகங்களை நீக்க எண்ணெயும் மூலிகைகளும் சேர்த்து காய்ச்சப்பட்ட பலவித அருமையான தைல முறைகளைக் கண்டுபிடித் திருக்கிறார்கள். அதோடு சிகையில் பட்டிருக்கும் எண்ணெயையும் தேகத்திலுள்ள அழுக்கையும் நீக்க, தேகத்திலுள்ள அழலையை நீக்கி ஆரோக்கியத்தை யளிக்கும் சிகைக்காய், அதன் இலை, இலுப்பைப்பிண்ணாக்கு, பயறு முதலிய வித்தினங்கள், பல வாசனை தினுசுகள் ஆகிய இவைகளை யுபயோகிக்கும்படி விதிக்கப்பட்டிருக்கிறது. நம் தேசத்திற்கு இவைகளே தக்கவைகள். குளிர்த்தேசங்களிலுள்ள மேல்நாட்டார்கள் சௌக்காரத்தை யுபயோகிக்கிறார்கள். நம் நாட்டில் உற்பத்தியாகும் மேற்கண்ட சிகைக்காய் முதலியவைகள் அவர்கள் தேசத்தில் உற்பத்தியாகா.

நம்மவர்கள் மேல்நாட்டார்கள் உபயோகிப்பதை நாம் உபயோகிப்பது ஒரு கௌரவமென்று நினைக்கிறார்கள். இந்த நாகரீகப் பித்து

நம்மவரைப் பல வழிகளிலும் கெடுத்து சீர்குலைத்து விட்டது. இன்னும் கெடுத்துக்கொண்டுதானிருக்கிறது. நாம் மேலோங்கி வரலாகாதென்று எண்ணுவோர்க்கு நாமே உதவி செய்கிறோம். நமக்கு நாமே தீங்கிழைத்துக்கொள்கிறதால் அவர்கள் சிரமமெடுத்துக்கொள்ள வேண்டுவதில்லை.

நாம் நம்முன்னோராகிய அறிவாளிகள் காட்டிய வழியில் நடவாததால் பல வழிகளில் தீமைகளை யுண்டாக்கிக்கொள்கிறோம். சௌக்காரம் பூசிக்கொண்டு ஸ்னானம் செய்வதால் ஒருபோதும் கௌரவமடையமாட்டோம். அதற்கு மாறாக

(1) அது நம் தேசத்திற்குத் தீங்கையே செய்கிறது.

(2) நாம் அதை யுபயோகிப்பதால் நம் நாட்டு விளைபொருள்கள் செலவழியாதுபோக அவற்றின் உற்பத்தியும் அவற்றால் நம்மவர் அடையும் வர்த்தகவிர்த்தியும் பயனும் குன்றிவிடுகின்றன.

(3) நமது பணம் அன்னிய நாடுகளுக்குப் போய்ச் சேர்கிறது.

(4) சொல்ப செலவில் ஸ்னானம் செய்து தேகாரோக்கியம் பெறுவதை விட்டு இரண்டணாமுதல் 8 அணா வரையிலும் கூட செலவுசெய்து நம் தேகசுகத்தைக் கெடுத்துக்கொள்கிறோம்.

நமக்கு நாமே இவ்வாறு தீங்கிழைத்துக்கொள்ளும் நடக்கைகளை நாம் விட்டொழித்து நம் நாட்டுப் பொருள்களையே உபயோகிக்கும் வரை நாம் ஒருபோதும் முன்னேற்றமடையமாட்டோம். சகோதர சகோதரிகள் இதை நன்றாகக் கவனிக்குமாறு வேண்டிக்கொள்ளுகிறோம். கடவுளே நமக்கு நல்லறிவு அளிக்குமாறு பிரார்த்திப்போமாக.

பத்திரிகாசிரியர்.

---

## "மெய்யான சமயம் எது? பொய்யான சமயம் எது?"

நேயர்களே! நாம் முதல் வியாசத்தில் "மத தூஷணை" என்ற தலைப் பின்கீழ் உள்ள விஷயத்தில் குறித்த சிறு புத்தகம் மேற்கண்ட பெயருடையதே. இது யாழ்ப்பாணத்திலுள்ள ரோமன் கத்தோலிக் சமயத்தவர்களால் வெளியிடப்பட்ட ஒரு சிறு புத்தகம். இதில் "கத்தோலிக் சமயம் ஒரே தேவன் உண்டென்று கூறுகிறது. இந்து சமயமோ முப்பத்து முக்கோடி தேவர்கள் உண்டென்று போதிக்கிறது. எது மெய்? எது பொய்" என்று, இவ்வாறு இருபத்தைந்து வித்தியாசங்களைக் கூறி முடிவில் காத்தொலிக் சமயமே, அதில் கூறப்பட்ட தெய்வமே, மோக்ஷமே மெய்யென்றும், இந்துசமயம், தெய்வம் அதில் கூறப்பட்ட மோக்ஷம் யாவும் பொய் என்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

இதை யனுப்பிய நண்பர் இந்த நூலுக்கு மறுப்பெழுதி வெளியிட வேண்டுமெய் நம்மை மிகவும் வருந்திக் கேட்டுக்கொள்கிறார். அவ்வாறே

செய்வது மிகச் சுலபமான காரியமேயாகும். ஆனால் அப்படிச் செய்வது வீணான பயனற்ற காரியம் என்பதே நமது அபிப்பிராயம். ஆகையால் ஏன் பயனற்ற காரியம் என்பதற்குமட்டும் இரண்டொரு காரணங்களைக் கூறி அதோடு இதை முடிக்கிறோம். முன்னாடி யொன்றுமட்டும் கூறுகிறோம். அதாவது, இவர்கள் பைபிலில் கூறப்படும் தெய்வம், அந்த ஒரே கடவுளாதலால் அது பொய்யென்று நாம் கூறவில்லை. பைபில் என்ற நூல் ஏசுகிருஸ்து கூறிய உபதேசங்கள் என்பதாக அவர் சீடர்கள் நால்வரால் தனித்தனி வரையப்பட்ட ஒரு நூல் என்பது தெரிந்த விஷயம். மேலும் அக்காலத்தில் பதுமைகளையே தெய்வமாக ஆராதித்துக்கொண்டிருந்த நாகரீகமற்ற ஜனங்களுக்கு எவ்வளவு புத்திமதிகள் கூறத்தகுமோ அவ்வளவு மட்டும் கூறி, அவர்கள் அந்நிலையினின்றும் ஒருபடியேனும் மேலேறுமாறு வழிகாட்டப்பட்டிருக்கிறது. இனி மேற்கண்ட சிறு புத்தகத்தில் கூறப்பட்ட விஷயங்களைக் கண்டனம் செய்வது வீண் என்பதற்குக் காரணங் கூறுகிறோம்:—

1. இவர்கள் நம் நூற்களில் கூறியுள்ள விஷயங்களை யாராய்ந்தறியாமலே தவறாக அர்த்தங்கொண்டு அவற்றைக் குற்றமாகக் காட்டிப் பாமரரை மயக்கப் பார்ப்பதே வழக்கம்.

திருட்டாந்தமாக—நமது மதம் முப்பத்துமுக்கோடி தெய்வங்கள் உண்டென்று போதிப்பதாகக் கூறியிருப்பது பெரும் பொய். அதற்கு மாறாக தெய்வம் ஒன்றே என்பதைப்பற்றியும், தெய்வ லக்ஷணத்தைப் பற்றியும் நமது வேதத்தில் கூறியிருப்பதுபோல் பைபிலில் வீசம்பங்கு கூட கூறப்படவில்லையென்பதை எளிதில் நிரூபிக்கலாம். மேலுலகமாகிய தேவலோகத்திலுள்ளவர்களும், சிருட்டியாகிய எழுவகைத் தோற்றத்தில் ஒன்றைச் சேர்ந்தவர்களுமாகிய தேவர் முப்பத்து முக்கோடி என்று கூறப்பட்டிருப்பதை இவ்வாறு தவறாய்க் காட்டுகிறார்கள். இப்படித்தான் இவர்கள் காட்டும் குற்றங்களனைத்தும்.

2. நாம் எவ்வளவு சமாதானம் கூறினும், அல்லது அவர்கள் கொள்கைகளிலுள்ள தவறுதல்களை எவ்வளவு நிரூபித்தாலும் அவர்கள் அதை யொப்பமாட்டார்கள். அவர்கள் மனச்சாட்சி ஒப்புக்கொண்டாலும் "நான் பிடித்த முயலுக்கு மூன்று கால்களே" என்று சாதித்துப் பழையபடியே தூஷித்துக்கொண்டுதா னிருப்பார்கள். ஏனெனில் அப்படி யொப்புக்கொண்டால் அனேகர் பிழைப்புக்கே ஊனம் நேரிடும். திருட்டாந்தமாய் இவர்கள் மதக்கொள்கைகளை நியாயவாயிலாகக் கண்டித்து உண்மையை நிரூபித்துள்ள நூல்களில் சிலவற்றை ஈண்டு கூறுகிறோம் :—

1. சைவ தூஷண பரிகாரம்
2. சிவநாம விளக்கம்
3. விக்கிரஹ வணக்கம்
4. சிவனுந் தேவனா? வென்னுந் தியாநாவுக்கு ஆப்பு

5. இந்து ஜெய பேரிகை 1-ம் பாகம்
6. இந்து ஜெய பேரிகை 2-ம் பாகம்
7. இந்து ஜெய பேரிகை 3-ம் பாகம்
8. இந்து ஜெய பேரிகை 4-ம் பாகம்
9. கிறிஸ்தவர் விடைகளின் மறுப்பு
16. விவிலியக் குற்சிதம்
11. விவிலியக் குற்சித கண்டனதிக்காரம்
12. வஜ்ஜிர டங்கம்
13. கிறிஸ்துமத திரியேகத்துவ ஆபாசம்
14. ஏசுவை நம்பினால் இரக்ஷிப்படையலாமா ?
15. ஏசுக்கிறிஸ்துவுங் கடவுளா !
16 ஏசுக்கிறிஸ்து மனிதனே !
17. மிலேச்சமத கண்டனம்
18. கிறிஸ்தவர் ஞானோதய ஆபாச விளக்கம்
19. கிறிஸ்து மதத்தின் குருட்டு நம்பிக்கை
20. பைபில் யாரால் எழுதப்பட்டது ?
21. பாதிரிகளுக்கு ஓர் சற்புத்தி
22. ஏகோவாவின் அசங்கியமொழி
23. பழய ஏற்பாட்டின் ஆபாசமும், விபசாரமும்
24. மதுபானமும், கிறிஸ்துமதமும்
25. கிறிஸ்துமத வியாபகமும், கொலைகளும், அநீதிகளும்
26. பைபிலும், உலக சிருஷ்டியின் ஆபாசமும்
27. ஏசுமதசங்கற்ப நிராகரணம் முதலியன.

மேற்கண்ட நூல்களில்—1. பைபிலில் ஆரம்பத்திலேயே கடவுள் மனிதனைப்போல் கைகால் முதலிய அவயவங்களை யுடையவரென்று கூறப்பட்டிருக்கிறது.

2. கடவுள் இலக்ஷணம் சரியாய்க் கூறப்பட்டிருக்கவில்லை. ஆன்ம லக்ஷணம் மோக்ஷ லக்ஷணம் கூறப்பட்டிருக்கவில்லை.

3. ஆன்மாவை உள்ளபடி யறியும் மார்க்கம் கூறப்பட்டிருக்கவில்லை.

4. ஏசு “உன் விரோதி யுன்னை ஒரு கன்னத்திலடித்தால் அவனுக்கு மறு கன்னத்தையும் காட்டு” என்று வாயால் கூறினும், தம் விரோதிகளை மட்டும் சபித்துக் கடிந்துகொண்டிருக்கிறார். இவ்வாறு முரண்படும் விஷயங்கள் அனேகம் உள்ளன.

5. கிருஸ்துமதத்தில் சேராதவர்களெல்லாம் என்றும் மீளாத நித்திய நரகத்தில் தள்ளப்படுவோர்கள் என்று கூறப்பட்டிருக்கிறது. இது கடவுளைக் கருணையற்றவரென்று அறிவிப்பதோடு சுருதியுக்தி அனுபவங்களுக்கும், கடவுள் கருணாநிதி யென்ற உண்மைக்கும் முற்றும் பொருந்தாத விஷயம்.

இவ்வாறு நம்மவர் அனேகம் நூல்களை வரைந்திருக்கிறார்கள். ஆயினும் கிருஸ்தவர்கள் இணற்றுத் தவளைபோல் பழைய கந்தனே கந்தன் என்று தங்கள் பாட்டைத்தான் பாடிக்கொண்டிருக்கிறார்கள். ஆதலின் அத்தகைய நூல்களுக்கு மறுப்பெழுதுவது பயனற்ற வேலை. அத்தகையவற்றைப் பொருட்படுத்தாமல் விட்டு, நம்மவர்கள் அவர்களது கட்டுக் கதைகளாலும், மாய மொழிகளாலும் மயங்காவண்ணம் தடுப்பதற்கு முயலவேண்டியதே நாம் செய்யவேண்டிய வேலை. அது நமது கடமையாகவுமிருக்கிறது.

பத்திரிகாசிரியர்.

---

## நாலடியார் வசனம்.

(9-ம் தொகுதி 455-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 5-ம் அதிகாரம் தூயதன்மை.

(உடலின் அபரிசுத்தத்தன்மை கூறல்)

(சரீரத்தினின்றும்) ஈயின் இறகளவு (சிறிய) தோலானது உரிந்தாலும் (அவ்விடத்தில் காகமும் கழுகும் விரும்பும் இரத்தமும் சீழும் நிறைந்த புண்ணுண்டாமாகலின்) காக்கையைத் துரத்துவதற்காக ஒரு கோல் வேண்டுமல்லவா? (ஆதலால் பெண்ணினுடலைப் பார்த்து 'மாந்தளிர் போன்ற நிறத்தையும் இளமையையு முடைய பெண்ணே!' யென்று பிதற்றும் மூடர்கள் சரீரத்தை இத்தன்மையான இழிவுடையதென்று பார்க்கமாட்டார்களோ? (1)

உடலானது, ஒன்பது வகைப்பட்ட துவாரங்கள்தோறும் கொழிக்கும் மலங்களைத் தெரியாமல் மறைத்துவைத்திருக்கும் மேற்போர்வையாகிய தோலால் பெருமையுடையது. ஆதலால், மேல் மூடிய மலங்களை மறைக்கும் தோலைக்கொண்டு அதனிடத்து ஆசை வையாமல் (உடலை) உள்பாகம் வெளிப்புறமாகும்படி திருப்பிய பையைப்போல பார்க்க வேண்டும். (2)

எப்பொழுதும் உண்ணும் போஜன பதார்த்தங்களின் காரியத்தால் துர்க்கந்தம் வீசுமென்று கண்டு, பெரியோர்கள் வெறுத்துவிட்ட சரீரத்திற்கு தாம்பூலம் தரித்தல், தலை நிறையப் பூச்சூடல் முதலிய பொய்யழகுகளைச் செய்தால் உள்ளேயுள்ள மலம் நீங்கிவிடுமோ? (எவ்வளவு அலங்காரம் செய்யினும் உடல் மலபாண்டமே என்றபடி.) (3)

உள்ளிருக்கும் நீரை எடுத்துவிட்டபோது, 'நுங்கைத் தோண்டிவிட்ட காலத்தில் பனங்காய் எப்படி யிருக்குமோ அப்படி யிருக்கும்' என்று, கண்களின் தன்மையைக் கண்டு நடப்பேன். (அதைவிட்டு) 'மாதர்களின் கண்கள் தெளிந்த நீரிலுள்ள நீலோற்பல மலரையும் சேற்கண்டையையும் வேலாயுதத்தையும் ஒத்திருக்கின்றன' எனக் கூறி, அறிவில்லாத அற்ப மனிதர்கள் என் மனதைக் கவலைப்படுத்துவதினால் யான் (முத்திசாதனமாகிய) துறவறத்தை விட்டுவிடுவேனோ? (விடமாட்டேன் என்றபடி.)(4)

எல்லாரும் காணும்படியாகச் சுடுகாட்டில் உதிர்ந்து மக்கிக்கிடக்கின்ற பல்லாகிய எலும்பைப் பார்த்து, அதன் தன்மையை யறிந்து நடப்பேன். (அதைவிட்டு) அப்பற்களை, 'முல்லையரும்புகளென்றும் முத்துக்களென்றும்' பிதற்றும் உண்மைக் கல்வியைக் கல்லாத அற்ப மனிதர்கள், பெண்கள் வழியிற்செல்லும்படி என் மனதைச் கலக்கப்படுத்துவதனால் யான் துறவறத்தை விட்டுவிடுவேனோ? (விடமாட்டேன் என்றபடி.) (5)

குடலும், மூளையும், இரத்தமும், எலும்பும், தொடர்ச்சியான நரம்பும், தோலும் இடையிடையே வைக்கப்பட்டுள்ள மாமிசமும், கொழுப்பும் ஆகிய இவற்றுள் குளிர்ந்த மாலையைத் தரித்த இப்பெண்ணானவள் எத்தன்மையை யுடையவள்? (இவற்றுள் எதனைப் பெண்ணென்றெண்ணுவது என்றபடி.) (6)

நவத்துவாரங்களிலும் 'மலங்களூறி, வெறுக்கத்தக்க மூளை, சளி, எச்சில், குறும்பி, மலமூத்திரங்களாகிய மலங்களைக் கொழித்து ஒதுக்கும் சரீரமாகிய குடத்தை மேலே மூடியுள்ள தோலால் கண்களுக்கழகாய் இருப்பதாகக் கண்டு, மூடனானவன் 'பெருமைபொருந்திய (மூங்கிலையொத்த) தோள்களையுடையவளே!' என்று (புகழ்ந்து) கூறுவான். (7)

உயிராகிய அச்சு முறிந்துபோனால், துர்க்கந்தம் வீசும்படியான உடலாகிய வண்டியை வலியக் கழுகுகள் பெட்டைகளும் சேவல்களுமாகக் கூடி கால்களைப் பெயர்த்துப் பெயர்த்து நடந்து குத்தித் தின்னும். (ஆதலால்) உடலின் தன்மையை யறியாதவர்களாய் வாசனை பொருந்திய சந்தனத்தையும் மாலையையும் தரித்துக்கொண்டு உடலைப் பெருமையாகப் பேசிக்கொண்டாடுபவர்கள், அக்கழுகுகள் குத்துவதைக் காணமாட்டார்களோ? (8)

மயானத்திலிடப்பட்டு (தோல் முதலியவைகளின்றி எலும்பு மாத்திரமாகக் கிடக்கும்) இறந்தவர்களின் தலைகளானவை, பார்த்தவர்கள் மனம் நடுங்கும்படி குழிந்தாழ்ந்த கண்களையுடையவைகளாய்க் காணப்பட்டு, சாகாமலிருப்பவர்களைப் பார்த்து (மிகவும் சிரித்து) 'கண்டீர்களா? உங்களைப்போலிருந்த என் நிலைமை எவ்வாறிருக்கின்றது? இவ்வுடலின் தன்மை இத்தகையது! இதனை யறிந்து இனியேனும் பாதுகாத்து நன்மார்க்கத்தில் நில்லுங்கள்' என்று கூறுகின்றனபோலும். (9)

இறந்தவர்களுடைய வெண்மையாகிய தலைகள் பார்த்தவர்க ளஞ்சும்படியாகச் சிரித்து, இல்வாழ்க்கையி லிறுமாந்திருப்போர் குற்றத்தை நீக்கும். அதைக் குற்றமற்றவர்கள் பார்த்து, இவ்வுடலின் தன்மை இத்தகையதென்றறிவதால், தங்கள் சரீரத்தை ஒரு பொருளாக மதியார்கள்.

## 6-ம் அதிகாரம்—துறவு.

(யான், எனது என்னும் அகப்பற்று, புறப்பற்றுக்களை விடுதல்)

விளக்குப் புகுந்தவுடனே இருள் நில்லாமல் நீங்கிவிடுவதுபோல, ஒருவன் தவத்தின்முன் பாவமானது நில்லாது. அந்த விளக்கிலுள்ள எண்

ணெய் குறைவுபட்டபொழுது (மீண்டும்) போய்ப் பாய்வதுபோல, புண்ணியம் நீங்கினவிடத்துப் பாவம் வந்து சேரும். (இருள் சேராமலிருக்க எண்ணெய் குறையாதபடி பார்த்துக்கொள்ளவேண்டியதுபோல, பாவம் சேராதிருக்கப் புண்ணியம் செய்துகொண்டிருக்கவேண்டும் என்றபடி) (1)

செல்வமும் இளமையும் சரீரமும் நிலைபெற்றிராமல் அழிந்துபோவனவென்றும், நோய்களும், கிழத்தனமும், மரணமும் காத்திருக்கின்றனவென்றும் நினைத்துப் பெரியோர்கள் தங்கள் காரியமாகிய தவத்தை (இடைவிடாது) செய்வார்கள். (அதைவிட்டு) அளவில்லாத இலக்கணம் சோதிடம் முதலிய நூல்களைப் பிதற்றித் திரியும் பித்தர்களைப் போல அறிவீனர்களில்லை. (இதனால் 'அவற்றைக் கற்கலாகாது' என்பதல்ல. தருக்கம் வியாகரணம் முதலியவை வேதாந்த நூல்களைக் கற்பதற்குக் கருவி நூல்களாகலின், அவற்றை வேண்டியவளவு பயின்று, ஞான நூல்களையே மிகுதியாகக் கற்கவேண்டுமென்பது கருத்து.) (2)

இல்வாழ்க்கையும், இளமையும், நிறமும், அழகும், மிகுந்த சுற்றத்தாராதரவும், செல்வமும், பலமும், ஆகிய இவைகளெல்லாம் ஆராய்ந்து பார்க்குமிடத்து அநித்தியமானவை யென்றறிந்து, பெரியோர்கள் தாங்கள் கடைத்தேறும் வழியைக் கைக்கொண்டு தாமதியாமல் (பந்தத்திற்குக் காரணமான) இருவகைப் பற்றையும் விடுவார்கள். (3)

அறிவில்லாதவர்கள் பலகாலமும் துன்பத்தை யனுபவித்தாலும் (மேலும் இல்வாழ்க்கையிலுண்டாகும்) இன்பத்தையே யிச்சிப்பார்கள். அறிவுடையோர், இல்வாழ்க்கையிலுண்டாகும் இன்பத்தின் வேறுபாட்டை (துன்பக் கலப்புள்ளதென்பதை) யறிந்து, அதில் உண்டாம் துன்பத்தைப் பார்த்து, அவ்வில்வாழ்க்கையின் சம்பந்தத்தை யொழிப்பார்கள். (4)

(எது நல்லது? எது கெட்டது? என்பதைப்பற்றிச் சிறிதும்) என்னோடு கலந்து ஆலோசிக்காமல் துணிச்சல்கொண்டு (விஷயங்களிற்) பாய்ந்து செல்கின்ற என் மனமே! இளமைப் பருவமும் வீணாகக் கழிந்து போய்விட்டது. இப்பொழுதே வியாதியும் விருத்தாப்பியமும் வந்துவிடும். ஆகையால், (துன்பங்களுக் கிருப்பிடமாகிய பிறப்பையொழிக்கும்) நன்மார்க்கத்தை யடைவோம் வருவாயாக. (5)

(மனைவியானவள்) இல்லறத்திற்குரிய மாட்சிமைபொருந்திய குணங்களோடு புத்திரரைப் பெறுதலும் இல்லாதவளா யிருந்தாலும், அவளை மணந்தவன் (அவளை) விடுதல் அருமையாகும். ஆகையால், கற்றறிந்த பெரியோர்கள் உனக்குள்ள வறுமை காரணமாக, மேலாகிய துறவறத்தை விரும்பி, (மணம் புரியுமுன்பே) இல்வாழ்க்கையை விட்டுவிடு என்றார்கள்.

உறுதியுடன் தாங்கள் கைக்கொண்ட தவங்களால் மனங் கலங்கும்படி சகிக்கமுடியாத் துன்பங்கள் நேரினும், அவற்றைப் பொருட்படுத்தாமல் தள்ளி, அத்தவத்தில் தங்களை நிறுத்தும் வல்லமையுடையோரே, நற்றவ வொழுக்கத்தைக் காப்பாற்றும் சிறப்புடையவ ராவர். (7)

(பிறர்) தம்மை இழிவாக நிந்தித்துப் பேசினதைத் தாங்கள் பொறுத்துக்கொள்ளுவதுமல்லாமல், 'ஐயோ பாவம்! இவர்கள் நம்மை இவ்வாறு வைததாகிய தீவினையின் பயனாக, மறுமையில் எரிவாய் நரகத்தில் வீழ்வார்களே!' என்று அவர்களுக்காக இரக்கங் கொள்வதும் பெரியோர் கடமையாம். (8)

மெய், வாய், கண், மூக்குச், செவி என்னும் ஐம்பொறிகளாலுண்டாம் ஆசைகளையும், மனத்தால் வரும் ஆசையையும் தீய வழியிற் செல்லாதடக்கி, நல்லொழுக்க வழியில் கலங்காமல் செலுத்தும் வல்லமையுடையவன் தவறாமல் மோக்ஷமடைவான். (9)

(இல்லறத்தில்) துன்பமே மேலும் மேலும் வருவதைப் பார்த்தும், அறிவில்லாதவர்கள் அதனையே அடைய ஆசிப்பர். பெரியோர் இன்பம் உண்டாகுந்தோறும் அதனால் வரும் துன்பத்தைப் பார்த்து அதனை அபேக்ஷியார். (தொடரும்.) (10)

பூ. ஸ்ரீனிவாசன், தமிழ்ப்பண்டிதர்,
சித்தூர்.

## பூர்வீக இந்தியாவில் சுருக்கெழுத்து.

[ஸ்ரீமான் இராவ்சாஹேப் R. கிருஷ்ணராவ் போன்ஸ்லே (Assistant Secretary to the Commissioner for Govt., Examinations, joint Secretary, South Indian Research Conferrence and member of the Senate and Academic Counsil, University of Madras, Madras.) அவர்களால் 1923ஞ டிசம்பர்மீ வெளியான "South Indian Research" என்ற சஞ்சிகையில் வரையப்பட்டிருந்ததன் மொழிபெயர்ப்பு.] :—

ஸ்ரீமான் திவான்பகதூர் C. V. முனிசாமி அய்யர் அவர்கள் பத்திரிகைத் தொழிலைப்பற்றி செய்த அரிய சொற்பொழிவில் பத்திரிகைக்குச் சமாசாரம் அனுப்புவது நம் நாட்டில் பூர்வீகமென்றும், கணேசபகவானே முதல் சமாசாரக்காரரென்றும், பாரதயுத்தத்தில் சஞ்சயர் விசேஷ யுத்த சமாசாரக்காரராக விருந்தனர் என்றும் கூறினர். அவர் சொற்பொழிவு முடிந்தபின் இந்தியாவில் பூர்வீகத்தில் சுருக்கெழுத்து எழுதுவதும் உபயோகத்திலிருந்ததென்று, அவர் வியக்கும்படி நான் கூறினேன். ஓர் புராதனத்தமிழ் நூலில் கூறப்பட்டிருந்த விஷயமே இதற்கு ஆதாரமாகும். அது பின்வருமாறு :—

மதுரையிலிருந்த மூன்றாவது தமிழ்ச்சங்கத்தின் காலம் சுமார் கி. பி. 100-வது ஞ. அது நக்கீரரைத் தலைமையாகக்கொண்ட நாற்பத்தொன்பது பேர் அடங்கிய சங்கம். இவர்கள் வெளியிலிருந்து வரும் புலவர்கள் அரசனிடம் பரிசுபெறப் புதிதாய் இயற்றிச் சங்கத்தில் அரங்கேற்றக் கொண்டு வரும் நூல்களை யாராய்ந்து முடிவு கூறுவது வழக்கம். அங்குவரும் புலவர்களைப்பற்றியும் அவர்கள் எழுதிவந்த நூல்களைப்பற்றியும் சங்கத்தலைவருடைய அபிப்பிராயம் எவ்வாறிருப்பினும், அவரும் சங்கத்திலுள்ள அவயவிகளும் ஒரு சூதான தந்திரத்தால், வந்த வித்வானுடைய நூலை யங்கீகரிக்காது நிராகரித்து வந்தார்கள். எவ்வாறெனில், ஒரு வித்வான் சுயமாய் ஒரு நூலை யியற்றிக் கொண்டுவந்தாலும் இவர்கள் அது புதிதாக இயற்றப்பட்டதல்லவென்றும்,தங்களுடைய புத்தகசாலையிலுள்ள பழைய நூலேயென்றும் கூறி, ஒரு பிரதியைக் காட்டி வந்தவித்துவானைப் பிரமிக்கச்செய்வதோடு அவனைக் கள்ளனாகவும் ஆக்கிவிடுவார்கள். இந்தத் தந்திரம் எவ்வாறு நடந்தது? அச்சங்கத்தில் சுருக்கெழுத்து எழுதுவோர் இருந்தார்கள். அவர்கள் சங்க அவயவிகளுக்குப் பின்னால் பள்ளமான விடத்தில் சபையோர்க்குப் புலப்படாவண்ணம் மறைவாய் உட்கார்ந்திருந்தார்கள்.

புதிதாக வந்த வித்வான் தன் கவிகளைக் கூறிக்கொண்டே யிருக்கையில், சுருக்கெழுத்தில் பழகிய இவர்கள் அவற்றைச் சுருக்கெழுத்தில குறித்துக் கொண்டு பிறகு பெரிய எழுத்தில் எழுதித் தங்கள் பழைய நூல்களில் இருந்து எடுத்ததுபோல் காட்டி, வந்தவித்துவானைத் தோல்வியடைந்து பிரமித்து நாணத்தோடு திரும்பிச்செல்லச் செய்வார்கள். அனேகம் வித்வான்கள் இந்த மோசத்திற் குள்ளானார்கள்.

இடைக்காடர், திருவள்ளுவ நாயனார், ஔவை இவர்கள் மூவரும் சங்கத்திற்குச் சென்றுமட்டும் இந்த மோசச்செய்கை நடந்துகொண்டே யிருந்தது. இடைக்காடர் சங்கத்தார் செய்கையை யூகித்துக்கொண்டு பட்சிகள் மிருகங்களின் ஒலிகள் கலந்த பாவை வரைந்து சங்கத்தார் முன் பாடினார். சுருக்கெழுத்து வரைவோருடைய எழுத்தாணி அந்த ஒலிகளை எழுதக்கூடவில்லை. இவ்வாறு இடைக்காடர் அவர்கள் தந்திரம் பலிக்காதபடி செய்து அச் சங்கத்தாரின் அகங்காரத்தை யடக்கிவிட்டார்.

அனேகம் வித்வான்கள் கூறிய கவிகளை, அவர்கள் சொல்லிக்கொண்டு போகும்போதே சங்கப்புலவர்கள் சுருக்கெழுத்தின் உதவியின்றி எழுதிக் கொண்டிருக்க முடியாதென்பது யாவரும ஒப்புக்கொள்ளவேண்டிய விஷயமே. தேசபாஷைகளில், தமிழில் மட்டுமல்ல, தெலுங்கு, கன்னடம், மலையாள பாஷைகளிலும் (இப்போது இராஜாங்கத்தார் பரீக்ஷைகள் வைக்க ஆலோசிக்கிறபடி) சுருக்கெழுத்து ஏற்படுத்தலாகுமென்பது நிச்சயமாகத் தோன்றும் வரையில் பூர்வீகத்திலும் அது ஆகக்கூடியதாகவே யிருந்திருக்கவேண்டும். இவ்வுலகில் எதுவும் புதிதல்ல. சங்கத்தார் உபயோகித்து வந்த சுருக்கெழுத்து எத்தகையதெனக் கூறமுடியாது. ஆனால் ‘சுருக்கெழுத்து எழுதுவோன்’ (Phonographer=சத்தத்தை வடிவமாக வரைவோன்) என்பதற்குத் தமிழில் சரியான பதம் இருந்திருக்கிறது. திரிசிரபுரம் S. P. G. கல்லூரியைச் சேர்ந்த பண்டிதராகிய ஸ்ரீமான் M. S. பூர்ணலிங்கம்பிள்ளை யவர்கள், இப்போதிருக்கும் தமிழ்ச் சங்கத்தில் “ஊசிமுறி” என்ற கவிகளைப்பற்றி பேசியபோது, அவற்றில் இரண்டொரு கவிகளைக் கூறி, இடைக்காடர், வித்துவான்களை ஏமாற்றிக்கொண்டிருந்த சங்கத்தாரை எவ்வாறு பங்கப்படுத்தி ஜயமடைந்தார் என்பதை நிரூபித்தார். தமிழ்க்காவியங்களில் பிரசித்திபெற்ற “காரிகை” யின் உரையிலும், தொல்காப்பியத்திற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரையிலும் அந்த “ஊசிமுறி”க்கவி குறிக்கப்பட்டிருக்கிறது. சென்னை, மேரி இராணியாரது பெண்கள் கல்லூரியில் போதகாசிரியராகிய ஸ்ரீமான் க. ரா. நமசிவாய முதலியாரவர்களது பேருதவியால் அவரிடம் எழுத்துப் பிரதியாகவிருந்த இந்த அருமையான கவியை நான் பார்வையிடலானேன். மேற்படி கவிக்கு ஆரைப்போய்யிலான் எழுதிய உரையில் ‘சுருக்கெழுத்தெழுதுவோன்’ என்பதர்குத் (Phonographer) தமிழ்ப்பதம் “ஒலியெழுத்தாளன்” என்று குறிக்கப்பட்டிருக்கிறது. ஒலி+எழுத்து+ஆளன். “சத்தத்தை வரிவடிவாகிய எழுத்தாக எழுதுவோன்” என்பது இதன் பொருள். “ஊசிமுறி” என்பதில் ஊசி=எழுத்தாணி, முறி=உடைத்தல், அதாவது “எழுதமுடியாமற் செய்தல்” என்பது இதன் பொருள்.

நான் கேட்டுக்கொண்டபடி இந்த அரிய கவி மேற்படி பண்டிதரால் அச்சியற்றப்படுகிறது.

குறிப்பு:—இது சம்பந்தமாக இரண்டொரு வார்த்தைகள் நாம் கூற வேண்டியிருக்கிறது. மேலே குறிக்கப்பட்ட சங்கத்தில் ஏக சந்தக்கிராகி, துவிசந்தக்கிராகி என்ற இருவர் இருந்ததாகவும், அவர்களே அவ்வாறு புதிதாய்வந்த வித்வான்கள் கூறும் கவிகளை மனதில் கிரகித்துக்கொண்டு வரைந்து வந்தார்கள் என்றும் கர்ண பரம்பரையான ஒரு சரித்திரம் உண்டு. "ஏக சந்தக்கிராகி" எனில் ஒருவர் கூறுவதை ஒருமுறை கேட்டதே மனதில் கிரகித்துக்கொண்டு அதை மறுபடி கூறச சக்தியுடையவன். "துவிசந்தக்கிராகி" எனில் இருமுறை கூறினால் கிரகிப்பவன், ஆயினும் ஒருவர் பாடியவற்றை எவ்வளவு பாட்டுகளாயினும் ஒரேமுறை கேட்பதால் ஒருவர் மனதில் கிரகித்துக்கொள்வது சாத்தியமெனத் தோன்றவில்லை. ஒளவைபிராட்டியார் "வெண்பா இருகாலிற் கல்லானை" என்றனர். ஒரு வெண்பாவையே இருமுறையிற் கற்பது அரிதெனத் தெரிகிறது. வரப்பிரசாதத்தால் எங்கோ ஒருவர் அத்தகைய சக்தி வாய்ந்தவரா யிருக்கலாகும். சங்கத்தில் அத்தகையோர் இருந்தது மெய்யாகவே யிருப்பினும், சுருக்கெழுத்து அறிந்தோர அக்காலததில் இருந்தது உண்மையென்றே தெரிகிறது. இன்றேல் புராதனமான நூற்களில் அவர்களைக குறிக்கும தகுதியான (ஓலியெழுத்தாளர் என்ற) ஒரு பெயர் இருக்கக் காரணமில்லை. ஒரு பொருள் இருந்தாலே அதற்கென ஒரு பெயர் இருக்கலாகும். மேலும் எவ்வளவோ அபூர்வமான காரியங்களைச் செய்யவல்லவரும், யோக சகதியால் அட்டமாசித்திகளும், அன்னிய உலகங்களில நடக்கும் சங்கதிகளை யறியும் வல்லமையும பெற்றிருந்த நமது முன்னோர்கள் சுருக்கெழுத்து எழுத அறிந்திருந்தார்கள் என்பது ஒரு அதிசயமல்ல.

பத்திரிகாசிரியர்.

---

## பகவத்கீதை வசனம்.

(35-ம் பக்கத் தொடர்சசி.)

## 13-வது, க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞவிபாகயோக அத்தியாயம்.

[முதல் அத்தியாயம் தொடங்கி ஆறும் அத்தியாயம் வரையில் துவம் பதாரத்த நிருபணமும், ஏழாம் அத்தியாயம் தொடங்கி பன்னிரண்டாம் அத்தியாயம் வரையில் தத்பதார்த்த நிருபணமும் கூறப்பட்டது. இப்போது தத்துவம் பதார்த்தங்களின் அபேத ரூபமான மகாவாக்கியத்தின் பொருளை அருளிச்செய்யக் கருதித் தத்துவஞானத்தைப் பிரதானமாகவுடைய பதின்மூன்றும் அத்தியாயம் முதல் பதினெட்டாவது அத்தியாயம் வரையில் பகவான் கூறத்தொடங்கினர். ஆன்மஞானம் ஒன்றே பிறப்பிறப்பிற்குக் காரணமாகிய அஞ்ஞானமென்னும் அவித்தையை யழிக்கத்தக்கதாகும். ஆதலால் அத்தகைய ஆன்மஞானமே இப்போது கூறப்படுகிறது.]

(பகவான் பிறவி, பிணி, மூப்புச சாக்காடாகியவைகளோடு பொருந்தியிருக்கும் தேகமும், அதில் வசிக்கும் ஜீவனுமாகிய, க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் என்பவைகளைப்பற்றி கூறத் தொடங்குகிறார்.)

ஏ பார்த்த! உயிரால் அனுபவிக்கப்படும் சுகதுக்க போகங்களை யுண்டாக்கும் இந்திரியங்கள் கரணங்கள் பிராணாதிவாயுக்கள் முதலியவைகளுக்கு இருப்பிடமாகிய இத்தேகமே க்ஷேத்ரம் எனப்படும். இந்தச் சரீரத்தை ஆராய்ந்தறிந்துணருவதும், இதில் வசிப்பதுமான உயிர் க்ஷேத்ரக்ஞன் எனப்படும்.

(இப்போது இச்சீவான்மா அசம்சாரியாகிய பரமான்மாவோடு ஏகத்வரூபமான பாரமார்த்திக சொரூபத்தைப் பகவான் அருளிச் செய்கின்றார்.)

ஏ அர்ச்சுன! இந்திரியாதிகளோடு பொருந்திய க்ஷேத்ரம் என்ற உடல்கள் யாவற்றிலும் அறிவு சொரூபமாய் பிரகாசித்துக்கொண்டிருக்கும் க்ஷேத்ரக்ஞன் என்ற உயிர் பிரம சொரூபமான நானே என்று அறிதி. இந்த க்ஷேத்ரம் க்ஷேத்ரக்ஞன் என்ற இரண்டினையும் அவற்றின் தன்மைகளோடு எது அறிகிறதோ அதுவே ஞானம் என்று அறிவாயாக. இது சுருதி சம்மதமாம்.

(மேலே கூறிய விஷயங்களை இப்போது பகவான் விரிவாய்க் கூறத் தொடங்குகிறார்.)

ஏ பர்குண! இந்தத் தேகமானது எத்தன்மையது என்பதையும், ஜடரூபமான இத்தேகத்தின் உற்பத்தியும், இச்சை துவேஷம் முதலிய தருமங்களும், இந்திரியாதி விகாரங்களும், சீவன்களது சைதன்ய ஆனந்த சொரூபமும் ஆகிய இவைகளைப்பற்றி வசிஷ்டாதி மகரிஷிகள் பலவகையாகக் கூறியிருக்கின்றனர். அவற்றை நான் சுருக்கமாகக் கூறுகிறேன் கேட்பாயாக.

பிருதிவியாதிபஞ்சபூதங்களும், அப்பூதங்களுக்குக் காரணமாகிய அகங்காரமும், அகங்காரத்தின் காரணரூபமான புத்தியும், புத்தியின் உற்பத்திக்குக் காரணமான அவ்வியக்தமும், ஆகிய இந்த எட்டு வகையான பிரகிருதிகளும், வினைகளைச் செய்விக்கும் அந்தக்கரணமும், ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்களும், ஐம்பொறிகளும், சப்தபாதி ஐந்து விஷயங்களும், ஆகிய இவற்றோடு இராகத்துவேஷாதி குணங்களும், சுக துக்கங்களும், இவை யாவும் பொருந்திய விகாரத்தன்மையோடு கூடிய இத்தொகுதியையே பெரியோர் தேகம் என்று கூறுநிற்பர். இனி இந்த க்ஷேத்ரத்திற் குரித்தாகிய ஞானசாதன குணங்களைக் கூறுதும் கேட்பாயாக.

(இப்போது பகவான் ஞானத்தை யடைவதற்கு வேண்டிய சாதனங்களைக் கூறி யருள்கின்றார்.)

தனது குணங்களைப் புகழ்தல், பிறர் தன்னை நன்கு மதிக்கும்படி தன் தருமங்களைச் செய்தல், மோக்ஷத்திற்கு இடையூறான குறைகள், அந்நிய பிராணிகளுக்குத் தீங்கிழைத்தல், நான் என்ற அகங்காரம், இகபர போகங்களை யனுபவிக்க வேண்டுமென்ற பேராசை, ஆகிய இவற்றையெல்லாம் கெடுக்கும் வல்லமை.

அழகிய மாளிகை, மனைவி, மக்கள் இவர்களிடம் உண்டாகும் ஆசை, தேகத்திலுள்ள பற்றால் அதைச் சுத்தமாகவும் அழகாகவும் வைத்துக் கொண்டிருத்தல், இந்திரியங்கள் சப்தாதி விஷயங்களில் செல்லும்படி விடல், கோபம், மூடர் (உலகபோக விச்சையுடையோர்) சகவாசம் ஆகிய இவற்றை விட்டொழித்தல்.

(இவைகள் அனைத்தும் விடத்தக்கவை. இனி கொள்ளத்தக்கவை களைக் கூறி யருள்கின்றார்.)

ஒப்பற்ற பிரம்ம சொரூபமாகிய என்னையே சித்தத்தின்கண் வைத்தல், இருவினைகளையும் ஒழிப்பவர்களாகிய ஞானிகள் வசிக்குமிடங்களில் (ஏகாந்தத்தலம்)சேர்தல், குருபணிவிடைசெய்தல், ஆன்ம அனான்ம பதார்த்தங்களின் சொரூபத்தை யுள்ளவாறு பகுத்தறியும் விவேகம், பிறப்பு, மூப்பு, வியாதி, மரணம் இவற்றாலுண்டாகும் துக்கங்களை யடிக்கடி சிந்தித்தல் ஆகிய இவையனைத்தும் ஞானசாதனங்களாகும். இனி இத்தகைய சாதனங்களால் முமுட்சுக்களடையாநிற்கும் ஞேயவஸ்துவின் சொரூபத்தைக் கூறுதும் கேட்பாயாக.

ஏ பார்த்த! அந்த ஞேயவஸ்துவானது உற்பத்தி நாசமற்றது. எப்போதுமிருக்கும் மகிமை பொருந்தியது. கூறும்பட்சத்தில் சத்து அசத்து என்று கூறும் குறைபாடில்லாமல் பிரகாசிப்பது. தான் பூரணமாய் நீக்கமற எங்கும் நிறைந்து நிற்றலின், எங்கும் கை, கால், காது, சிரசு முதலிய அங்கங்களை யுடையதா யிருக்கிறது.

விஷயங்களைக் காணுநிற்கும் இந்திரியங்கள் முதலிய வனைத்திலும் அறிவாய் நின்று தோற்றுவிப்பது. தனக்கென இந்திரியங்கள் ஒன்று மில்லாமலே இருக்கும் தன்மையது. தான் எவ்வித வஸ்துவோடும் சம்பந்தியாமலே சகல பிரபஞ்சங்களையும் தானே தரித்து நிற்பது. சத்வாதி குணங்கள் ஒன்றுமில்லாமலே அக்குணங்களைப் பொருந்தி யனுபவிப்பது. பஞ்சபூத பௌதிகங்களின் உள்ளும் புறம்பும் வியாபித்திருப்பது. தனக்கெவ்வித விகாரமுமின்றியே ஸ்தாவர ஜங்கம ரூபங்களாய் இருப்பது. இத்தன்மையதென்று சொல்லவும் அறியவும் கூடாதபடி அதி சூக்குமமானது. உண்மையில் அது ஏக சொரூபமாகவிருந்தும், பேதமுண்டானதுபோலச் சச்சரீரங்கள்தோறும் இருந்து பிரகாசிக்கின்றது. மேலும் அந்த ஞேயவஸ்து உருவமற்றதாய், அதிக தூரமாய், யாவும் தானாய், அதிக சமீபமாய் உள்ளது. சகல நாமரூப வஸ்துக்களையும் சிருட்டித்து மீண்டும் சங்காரம் செய்வது. ஒப்பற்ற சூரிய சந்திராதி ஜோதிகளுக்கெல்லாம் உள் ஜோதியாகி யொளிர்வது. ஞானரூபமாயும், ஞானத்திற்கு விஷயமாயும் உள்ளது.

ஏ பார்த்த! இத்தகைய பெருமைவாய்ந்த ஞேயவஸ்துவானது முன்பு கூறப்பட்ட ஞானசாதன குணங்களால் அனுபவமாக அறியத்தக்க பொருளாம். இப்போது தேகமாகிய க்ஷேத்திரத்தின்கண் பொருந்தியுள்ள ஞான

சாதன குணங்களையும், அக்குணங்களால் சாக்ஷாத்கரிக்கப்படும் ஞேயவஸ்துவின் இலக்கணங்களையும் சுருக்கமாக உனக்கருளிச்செய்தேன்.

(இப்போது பகவான் இதற்கு அதிகாரிகள் யார் என்பதைக் கூறியருள்கின்றார்.)

ஏ அர்ச்சுனா! எனது வாக்கை யலட்சியம் செய்யாமல் யான் முன் உரைத்த க்ஷேத்ரம், ஞானம், ஞேயம் என்ற முப்பொருள்களையும் என்னிடத்து அனன்னிய பக்தியுடையோரே யுள்ளபடி யுணர்வார்கள். அவ்வாறுணர்ந்த எனது பக்தர்கள் பிறப்பிறப்பையுண்டாக்கும் மாயையாகிய கடலைக் கடந்து முமூட்சுக்களால் இச்சிக்கப்படும் நிரதிசயானந்த சொரூபனாகிய என்னை யடைவார்கள்.

(பகவான் தேகம் ஜீவன் இவற்றின் அநாதித்தன்மையை யருளிச்செய்கின்றார்.)

ஏ பார்த்த! நாம் கூறிய பிரகிருதி புருடன் (தேகம் ஜீவன்) இவை யிரண்டிற்கும் உண்மையில் காரணத்தைக் கண்டறிபவர் ஒருவருமில்லை. ஆதலின் இவை அநாதியென நீ யறிதி. இனி இவற்றின் செய்கைகளைப் பற்றி கூறுதும் கேட்பாயாக.

செய்யப்படும் வினைகளுக்கு பிரகிருதியாகிய தேகமே காரணம். இன்பதுன்பங்களை உண்ணுகிறபது புருடனாகிய ஜீவனாகும். இந்தச் சீவன் மாயாரூபப் பிரகிருதியாகிய உடலின் கண் இருந்து, அவ்வுடலால் உண்டாக்கப்பட்ட சுக துக்கங்களை அநுபவியா நிற்பன். இச்சீவன் இது நான் இவை யென்னுடையவை என்ற தாதான்மியங்களைப் பொருந்தியிருத்தலால் யோனிகளில் ஜனித்தும் மரித்தும் உழன்றுகொண்டிருப்பன். (தொடரும்.)



சீடன்.

## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்

(38-ம் பக்கத் தொடர்ச்சி.)

காவலன்:—தெரியும்.

ஆனந்:—எப்படி இறந்தான் தெரியுமா?

காவலன்:—"ஓகோ தெரிந்துகொண்டேன். அவன் தற்கொலை செய்துகொண்டதாய்ப் பத்திரிகைகளில் கூறப்படினும் எனக்குமட்டும் உண்மை மனதிற் புலப்பட்டுவிட்டது. நீ யந்த விஷயமாய்த்தான்........" என்பதற்குள்,

ஆனந்தவிங் "உஸ் உஸ்...சங்கதி யுன்மனதிலேயே யிருக்கட்டும் பத்திரம். இந்த மாறுவேடம் தட்டிக்கொள்ளுமாவென் றறிவதற்கே இங்கு வந்தேன்" என்று கூறிவிட்டு அங்கிருந்து புறப்பட்டான்.

இனித்தான் ஆனந்தவிங் அம் மாறுவேடத்தின் நோக்கத்தை யடைய முயலவேண்டும். இதுவரையில் அச்சுதன் சினேகர்களில் ஒரு

வன் தன்னை அச்சுதனென்றே நம்பிக்கொண்டான்; தனக்கு அறிமுகமான காவலனும் நம்பிக்கொண்டான். ஆனல் இனி ஏமாற்றப்படவேண்டிய மனிதன் சாதாரணமானவனல்ல. மிக்க தந்திர சாமர்த்தியமும் சூக்கும புத்தியும் உடையவன்.

மூன்னள் வந்து ஒரு மணி நேரத்திற்கு அதிகமாய் ஆனந்தலிங் இறந்தவனுடைய சவத்தைக் கவனித்துச் சென்ருன். அவனுடைய மாறு வேடத்தால் காவலன் அப்போது அவனை யறிந்துகொள்ளவில்லை. இறந்தவனுடைய நடையுடைபாவனைகளை யறிந்துகொள்வது ஆனந்தலிங்குக்கு அவ்வளவு கஷ்டமாய்த் தோன்றவில்லை. ஆனல் அவன் குரலையெப்படி யறிவது? ஆனந்தலிங் சில இரகசிய சாத்திரங்களை யெல்லாமறிந்திருந்தான். ஆகையால் இறந்தவனுடைய வாயில் உதடுகள் அமைக்கப்பட்டிருக்கும் மாதிரியால் அவன் குரல் எப்படி யிருக்கும் என்று சிந்தித்து இறந்தவன் குரல்போல் நடிக்கவேண்டி யிருந்தது. சத்தம் உண்டாகும் குழல் யாவருக்கும் ஒரேமாதிரியே. வாயின் அமைப்பினலேயே குரல்களில் வித்தியாசம் தோன்றுவது.

ஆனந்தலிங்குக்கு இப்போது தன் மாறுவேடத்தில் பூரண நம்பகம் உண்டாயிற்று. அவன் சவங்க ளிருக்குமிடத்தை விட்டு நவீனபுரியின் ஓரத்திலிருக்கும் ஒரு நாணயமான வீட்டை நோக்கிச் சென்ருன்.

ஆனந்தலிங் அவ்வீட்டின் கதவைத் தட்டினதே ஒரு சிறுவன் வந்து "யார்?" என்ருன்.

ஆனந்:—லாயர் மல்லப்பர் வீட்டிலிருக்கிருரா?

சிறுவன் மிக்க தந்திர சாமர்த்தியமுடையவன் ஆதலால் "எனக்குத் தெரியாது. நீயவசியமாய் அவரைக் காணவேண்டுமோ?" என்ருன்.

ஆனந்தலிங் சிறுவன் தன்மையை யறிந்துகொண்டு "நான் அவரை யவசியமாய்க் காணவேண்டும்" என்ருன்.

சிறுவன் "முக்கியமான விஷயமோ?" என்ருன்.

ஆனந்தலிங் "மிக முக்கியமான விஷயம்" என்ருன்.

சிறுவன்:—"இப்படி வாருங்கள். அவர் வீட்டில்தான் இருக்கிருர்" என்று, ஆனந்தலிங்கை யொரு அலங்கரிக்கப்பட்ட அறைக்கு அழைத்துப் போய் அங்கு உட்காரவைத்துவிட்டு "இதோ அவரை யழைத்து வருகிறேன்" என்று கூறிவிட்டுச் சென்ருன்.

அந்த அறையிலிருந்த மின்சார விளக்கு கொஞ்சம் பிரகாசத்தோடு எரிந்துகொண் டிருந்தது.

ஆனந்தலிங் இரண்டொரு நிமிடங்கள் அங்கு தனியே யிருந்தான். அப்போது "ஆ! இவன் மிக்க ஜாக்கிரதையா யிருக்கிருன்" என்று தனக்குள் சிந்தித்துக்கொண்டான். அப்போதே மல்லப்பர் குணம் இத்தகையதென்று ஒருவாறு அவன் யூகித்துக்கொண்டான்.

அதற்குள் தூரத்தில் கூடத்தின் வழியாய் ஒரு மனிதன் வருவதைக் கண்டான். தனக்கிருக்கும் அனுபோகத்தால், அவன் முகத்தை ஒரு நிமிடமே பார்த்தாலும், உடனே அவன் மிக்க சூது, தந்திரம், அக்கிரமம், கல்நெஞ்சு முதலிய குணங்களையுடைய கொலைபாதகன் என்று அறிந்துகொண்டான்.

மறு நிமிடம் லாயர் அறைக்குள் வந்ததும் "நீ யென்னைக் காணவேண்டியா வந்தாய்?" என்றான்.

ஆனந்:—ஆம்.

லாயர்:—உன் விவகாரம் என்ன கூறு? என்று சொல்லிக்கொண்டே அறையின் மத்தியிற் சென்று தீபத்தை நன்றாய்த் தூண்டினான். அச்சமயம் அவன் ஆனந்தலிங்கின் பக்கம் முதுகைத் திருப்பிக்கொண்டிருந்தான். தீபத்தைத் தூண்டிவிட்டு ஆனந்தலிங் பக்கம் திரும்பினான்.

உடனே வீறிட்டு ஒரே கூச்சலிட்டுக்கொண்டு நாலைந்தடிகள் பின்னிடைந்தான். திகிலால் அவன் தேகம் நடுக்கமெடுத்துக்கொண்டது. சுமார் கால்மணி நேரம் நிதானித்து மனதைத் தைரியம் செய்துகொண்டு வாய் குளறிக்கொண்டே,

"நீ நீ......அச்சுதனு......" என்றார். ஆனந்தலிங் நிமிர்ந்து நின்று, "என்னைக் காண்பது தங்களுக்கு மிக்க ஆச்சரியமா யிருப்பதாய்த் தெரிகிறது" என்றான்.

லாயர் வாய் குளறிக்கொண்டே "நீ...நீ...இ...இறந்துபோனாய் என்று நினைத்துக்கொண்டிருக்கிறேன்" என்றார்.

ஆனந்தலிங் மிக்க வியப்படைந்தவன்போல் "என்ன? இறந்துபோய் விட்டேனென்று எண்ணிக்கொண்டீரா?" என்றான்.

லாயர் தன்னாற் கூடியவரையில் மனதைத் தைரியம் செய்துகொண்டு ஏதோ கூற முயன்றான். அவனால் முடியவில்லை.

ஆனந்:—"சரி, தாங்கள் நான் இறந்துபோனதாய் நினைத்தும் துக்கம் கொண்டாடுவதாய்த் தெரியவில்லையே!" என்றான்.

லாயர்:—"நீ உண்மையாகவே இறந்ததாயினும் நான் ஏன் துக்கம் கொண்டாடவேண்டும்?" என்றான்.

ஆனந்:—நான் பனிரண்டு வருடங்கள் நன்றியோடு தங்களிடம் ஊழியம் செய்யவில்லையா? அதற்காகவேனும் கொஞ்சகாலத்திற்கு துக்கம் கொண்டாடவேண்டாமா?

லாயர்:—நீ என்னிடம் உன் உழைப்பிற்குத் தக்க சம்பளம் பெற்றுக்கொண்டாயேயன்றி சும்மா வேலை செய்யவில்லை.

ஆனந்:—இருக்கட்டும். ஏன் நான் இறந்துபோனதாய் நினைத்தீர்? அப்படி யார் கூறக்கேட்டீர்? (தொடரும்.)

**ஆரணி. குப்புசாமி முதலியார்.**

## வெள்ளச்சேதத்தின் விவரங்கள்.

### அரசாங்க அறிக்கை

வெள்ளச்சேதத்தின் விவரங்களைப்பற்றி ஜில்லா கலெக்டர்கள் சென்னை அரசாங்கத்துக்கு அனுப்பியுள்ள செய்திகள் பின்வருமாறு:—

### மலையாளம்.

உயிர்ச்சேதம் சுமார் 100 பேர் இருக்கலாம். 50,000 வீடுகள் அழிந்து போயின. பல்லாயிரம் ஏகரா விஸ்தீரணமுள்ள பயிர்கள் நாசமாயின. விதை, கால்நடை, கட்டிட சாமான் முதலியவை வாங்குவதற்கும் ஜனவரிமீ வரையில் ஜனங்களின் ஜீவனத்திற்கும் பணம் வேண்டும். பத்து லட்சம் ரூபா அதிகமாகாது.

### திரிசிராபள்ளி.

திரிசிராப்பள்ளி நகரத்தில் வீடிழந்த 2000 பேர் நகரசபையின் கொட்டகைகளில் தற்காலத்திற்கு தங்கியிருக்கின்றனர். கந்தசாமி சேர்வை, சின்னையாபிள்ளை இவர்களாலும், பிஷப் ஹெபர் கலாசாலையிலும் அன்னமளிக்கப்பட்டு வருகிறது. ரூபா 6500-ம் அரிசியும் வசூலாகி யிருக்கிறது. ஜில்லாவைப்பற்றிய தகவல்கள் வந்து சேரவில்லை. வீடிழந்தவர்கள் அருகிலுள்ள கிராமங்களில் உதவிபெற்று வருவதாகத் தெரிகிறது. கால்நடைகளுக்கும், உயிர்களுக்கும் சேதமேற்பட்டதாக அறிவிக்கப்படவில்லை. நகரில் கலராவின் கொடுமை அதிகமாகி வருகிறது.

### தஞ்சாவூர்.

எங்கும் மனித உயிர்களுக்குச் சேதம் ஏற்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. மாயவரத்திலும் சீகாழியிலும் கால் நடைகளுக்கு நஷ்டமேற்பட்டிருப்பதாகத் தெரிகிறது. தஞ்சாவூர் தாலூகாவில் 900 வீடுகளும், கும்பகோணத்தில் 2000 வீடுகளும் நஷ்டம். மாயவரத்திலும் சீகாழியிலும் சேதம் மிகவும் அதிகம். தஞ்சாவூரில் வீடிழந்தவர்கள் 4000, கும்பகோணத்தில் 10,000, மாயவரத்திலும் சீகாழியிலும், தொகை கணக்கில் அகப்படவில்லை. தஞ்சையில் 4000 ஏகரா, கும்பகோணத்தில் 10,000 ஏகரா பயிர்கள் நாசம். மாயவரம் சீகாழி தாலூகாக்களில் பயிர்ச்சேதம் அளவிட முடியாது. சீகாழி தாலூக்கா முழுவதும், மாயவரம் தாலூகாவில் நாற்பது கிராமங்களும் தண்ணீரில் மூழ்கியிருக்கின்றன.

### கோயமுத்தூர்.

முழு விவரங்களும் வந்து சேரவில்லை. ஜில்லா முழுவதிலும் 6000 வீடுகள் சேதம். உயிர்ச்சேதம் இல்லை. 24,000 ஜனங்கள் வீடின்றி யிருக்கின்றனர். வீடுகளைத் திருப்பிக் கட்டுவதற்கும், தொழிலாளிகளுக்கும் வேலை கொடுப்பதற்கும் பணம் தேவை.

---

ஓர் நல்ல காலைப்பானம்.—"சுக்கு, சீரகம், நன்னாரி, கொத்துமல்லி இவை நான்கையும் சம இடையாய்ச் சுத்திசெய்து சூரணித்து, அச் சூரணத்தில் ஒரு துலாம் சுத்த நீரில் போட்டுக் காய்ச்சி, சீனிபால் சேர்த்துக் காலையில் அருந்திவரின், வாதபித்த சிலேத்தும தோஷங்கள் கீழ்நோக்கிக் கழியும். சகல வியாதிகளும் விலகும்" என்று மேல்மீன் ம-ா-ா-ஸ்ரீ த. குப்புசாமிபிள்ளை அறிவிக்கிறார்.

## "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**ரக்தாக்ஷி௵ புரட்டாசிமீ—கலியுகாதி 5026—சாலிவாகனம் 1847,**
**பசலி 1334—கொல்லமாண்டு 1099-1100—ஹிஜரி 1343,**
**இங்கிலீஷ் 1924௵ செப்டம்பர்மீ—அக்டோபர்மீ**

| புரட்டாசி | செப்டம்பர் | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | செவ் | திரி16-13 | அசு49-8 | சித்60 | ஷடசீதி புண்ணியகாலம் |
| 2 | 17 | புத | சது19-3 | பரணி54-13 | சி54-23அ | அடுப்புவைக்க |
| 3 | 18 | வியா | பஞ்23-15 | ✲கிரு60 | மர60 | சந்திரசஷ்டி விரதம், கிருத்திகை, கபிலசஷ்டி |
| 4 | 19 | வெ | சஷ்28-33 | கிரு0-28 | சி0-28மர | பிரயாணம் விலக்க |
| 5 | 20 | சனி | சப்34-35 | ரோ7-33 | அ7-33சித் | தானியம்வாங்க |
| 6 | 21 | ஞா | அ40-43 | மிரு15-3 | சித்60 | மஹாலக்ஷ்மி விரதம் |
| 7 | 22 | திங் | நவ46-18 | திரு22-15 | சி22-15அ | |
| 8 | 23 | செவ் | தச50-50 | புன28-40 | சித்60 | |
| 9 | 24 | புத | ஏகா53-55 | பூச33-45 | சித்60 | |
| 10 | 25 | வியா | து55-18 | ஆயி37-38 | சி37-38அ | |
| 11 | 26 | வெ | திர54-55 | மக38-58 | ம38-58சி | |
| 12 | 27 | சனி | சது52-48 | பூரம்38-58 | சி38-58ம | |
| 13 | 28 | ஞா | ●49-20 | உத்37-23 | அமி60 | |
| 14 | 29 | திங் | பிர44-18 | அஸ்34-33 | சி34-33பி | |
| 15 | 30 | செ | துதி38-40 | சித்30-50 | சித்60 | |
| 16 | 1 | புத | திரி32-23 | சுவா26-23 | சித்60 | |
| 17 | 2 | வியா | சது25-45 | விசா21-48 | சித்60 | மாசசதுர்த்தி விரதம |
| 18 | 3 | வெ | பஞ்19-18 | அனு17-13 | சி17-13ம | மாடுவாங்க, கதிரறுக்க |
| 19 | 4 | சனி | சஷ்13-10 | கேட்12-50 | சித்60 | சூளைபோட |
| 20 | 5 | ஞா | சப்7-35 | மூல9-8 | அ9-8சித் | சரஸ்வதி ஆவாஹனம் |
| 21 | 6 | திங் | அ2-38 நவ58-18 | பூரா5-58 | மர60 | மஹாநவமி, ஆயுதபூஜை துர்க்கைநவமி, அவமாகம் |
| 22 | 7 | செ | தச54-45 | உத்3-33 | அ3-33சித் | விஜயதசமி |
| 23 | 8 | புத | ஏ52-0 | திரு1-50 | சி1-50பிர | சர்வ மதவ ஏகாதசி |
| 24 | 9 | வியா | து50-5 | அவி0-55 | சி0-55மர | பத்மநாப துவாதசி, சித்ராகார்த்திகை 33-45 |
| 25 | 10 | வெ | திர48-58 | சத0-23 | சித்60 | கபிலை,எத்தம் ஸ்தாபிக்க |
| 26 | 11 | சனி | சது48-50 | பூர1-3 | மர1-4சித் | சகலவிருக்ஷங்கள்வைக்க |
| 27 | 12 | ஞா | ○ 49-33 | உத்3-5 | அமி60 | பௌர்ணமி, கௌமதிஜாகர விரதம் |
| 28 | 13 | திங் | பிர52-28 | ரேவ5-45 | சித்60 | ஆஸ்வீயபகுளம் |
| 29 | 14 | செவ் | துதி54-43 | அசு-9-28 | சித்60 | கரிநாள் |
| 30 | 15 | புத | திரி59-0 | பர✲14-20 | சி14-20அ | கிருத்திகை |
| 31 | 16 | வியா | சது60 | கிரு-20-18 | மர60 | துலாரவி 17-25 |

(Second column, October portion: 1924௵ அக்டோபர்மீ)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| செ | 15உ சிம்-சுக் | | ராகு சுக் |
| சே | | | |
| | குரு | சனி | சூரி புத |

Printed & Published by N. Munisawmi Mudaliar at the
"Ananda Bodhini" Power Press, 15, Venkatesa Maistry St., Madras,